திருச்சிற்றம்பலம்.

வடமொழியிற் காளிதாசர் இயற்றிய

# சாகுந்தல நாடகம்.

இது

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜில்

தமிழ்ப்புலமை நடாத்தும்

பண்டிதர். நாகை. வேதாசலம் பிள்ளையால்

செந்தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுச்,





சென்னை

மீமோரியல் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

# முகவுரை.

---

வடமொழியிற் புலவர் திலகராய் விளங்கிய காளிதாசரால் இயற்றப்பட்ட சாகுந்தல நாடகம் சொற்சுவை பொருட்சுவை நிரம்பிப் பயில்வார்க்கு அறிவு துலக்கி இன்பம் விளைவிக்குங் கழிபெருஞ் சிறப்புடைத்தாய் நிற்றலின், அவ்வரிய பெரிய நாடகக் காப்பியத்தின் அருமை பெருமையைத் தமிழ் மக்களும் நன்குணர்ந்து மகிழும் பொருட்டு அதனைத் தெளிவான செந்தமிழ் உரை நடையில் மொழி பெயர்த்திட்டேம். இவ்வுரைக் காப்பியத்தின் இடையிடையே இன்றியமையா விடங்களிற் செய்யுட்கள் சிலவும் இயற்றியிருக்கின்றேம்.

இம் மொழிபெயர்ப்பு வடமொழியிலுள்ள முதல் நூலைச் சிறிதும் பிறழாமற் பின்பற்றிச் செல்வதாகும்.

இனி இந்நாடகக் காப்பிய அமைதிகளும் பிறவும் தமிழில் அகப்பொருட் டுறைகளோடு ஒப்புமை பெற்று நடக்கும் பான்மையும், இதன்கண் உள்ள பிற நுணுக்கங்களும் யாம் தனியாக வெளியிடும் சாகுந்தல நாடக ஆராய்ச்சி என்னும் நூலில் விரித்துவிளக்குவேமாகலின், அவை ஒரு சிறிதும் ஈண்டெழுதாது விடுத்தேமென்க.

## காளிதாசர் வரலாறு.

இனி இதனுக்கியோர் காளிதாசர் வரலாறு சரித்திர வுண்மை வழுவாது வழங்கக் காண்கின்றிலேம். இவர் பிறந்த நாடு இது வென்பதும், இவரைப் பெற்றாரிவரென்பதும், இவர் கலை பயிற்றப் பட்டு வளர்ந்தவாறும் பிறவும் ஒரு சிறிதாயினும் உண்மையாகப் புலப்படவில்லை. இவரைப்பற்றி இப்போது வழங்குவனவெல்லாம் அவரவர் தமக்குத் தோன்றியவாறு கட்டி வழங்கும் வெறும் பொய்க் கதைகளே யன்றிப் பிறவல்ல. சமஸ்கிருதமொழி உலக வழக்கி லில்லாமல் நூல் வழக்கில் மாத்திரம் பயின்று வந்த காரணத்தானே அவரவர் தமக்குத் தோன்றியவாறெல்லாம் பொய்யும் புளுகும் புனை

ந்து கட்டி அதன்கட் பொய்நூல்கள் பல எழுத இடம் பெற்றார். போசசரித்திரம் என்பது வெறும் பொய்க்கதையேயல்லது அது சரித்திரவுண்மை பொதிந்த நூலாகமாட்டாது. ஆகவே, அதனானும் பிற பொய்க்கதைகளானும் காளிதாசர்சரித்திரம் இதுவென்று துணிதல் ஒருவாற்றானுமியலாதென்க.

ஆயினும், இவர் வடநாட்டி லிருந்த தமிழ் மக்களில் இடையர் குலத்திற் பிறந்தவ ரென்பதும், இவர் இளம் பருவத்திலே கலையறிவு முற்றப் பெறுதற்குப் பொருட்டிரள் இல்லாது வறுமையால் வருந்தி வந்தன ரென்பதும், அங்ஙனம் வறுமையால் வருந்ினும் கல்வி பயிறலில் இடையறாத விழைவுகொண் டிருந்தமையினாலே இவர் தமக்கு ஏதோ ஒரு தெய்வீகமாய்க் கலையறிவு வாய்ப்பதாயிற் றென்பதும், இவர் குலத்தாற் றமிழரே யாயினும் தமது காலத்தில் தாமிருந்த நாட்டில் மிக்கு வழங்கிய வடமொழியைப் பயின்று அதிற் புலவராய் வயங்கின ரென்பதும், இவர் தம்மிடத்து மிக்க அன்பு பூண்டொழுகிய ஒரு காதற்பரத்தையைத் தமக்கு உரியளாகக் கொண்டு வாழ்ந்தன ரென்பதும் போன்ற சில குறிப்புக்களே இவரைப்பற்றி அறியக் கிடந்தனவாம்.

## காளிதாசரது சமயம்.

இனி இவர் சாகுந்தல நாடகக் காப்பிய முதலினும் இறுதியினும் சிவபெருமானையும், அவர் சிறப்படையாளங்களையும் விதந்தெடுத்துக் கூறி வணங்கிக் கடவுள்வாழ்த் துரைத்தமையானும், குமாரசம்பவ காவியத்திற் சிவபெருமானே முழுமுதற் கடவுளென்பதனை நாட்டினமையானும் இவரது சமயம் சைவமே யாதல் தெற்றெனத் துணியப்படும்.

## காளிதாச ரியற்றிய வேறு நூல்கள்.

இனி, இவர் இச்சாகுந்தலமேயன்றி விக்கிரமோர்வசீயம், மாளவிகாக்கினிமித்திரம் எனும் வேறிரண்டு நாடகக் காப்பியங்களும், குமாரசம்பவம், இரகுவமிசம் எனும் இரண்டுபெருங்காப்பியங்களும் மேகசந்தேசம் எனும் ஒரு சிறு நூலும் இயற்றினர்.




## காளிதாசரது காலம்.

இனி இவர் விளங்கிய கால மிதுவென்பது சிறிது காட்டுவாம். சாலிவாகன சகம் ௫௱௭, அல்லது கிறிஸ்து பிறந்த ௫௮௫ - ௮௬,இல் செதுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்றில் காளிதாசர், பாரவி என்பாரோடு ஒருங்கு சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கின்றார். இனி, இப் பாரவி என்னும் புலவர் இயற்றிய கிராதார்ச்சுனீயம் என்னும் நூலிற் பதினைந்து காண்டங்களுக்கு உரை எழுதிய அவிநீதர் என்பார் கிறிஸ்து பிறந்த ௪௭௦ - ஆம் ஆண்டில் இருந்தாரென நாயவர்மரது கர்நாடக பாஷா பூஷணத்தில் தெற்றென விளக்கப்பட்டிருக்கின்றது. இதனாற் காளிதாசரும் பாரவியும் கி - பி நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டி லிருந்தாரெனல் பெறப்படுகின்றது.*

இன்னும் விக்கிரமாதித்த வேந்தன் அவைக் களத்திலே தன்வந்தரி, க்ஷபணகன், அமரசிங்கன், சாங்கு, வேதாளபட்டன், கடகர்ப்பரன், காளிதாசன், வராகமிகிரன், வரருசி என்னும் நவமணிகள் விளங்கின ரென்பது பிரசித்தமாக அறியப்பட்டவோர் உண்மையாகலின், அவ்விக்கிரம வேந்தன் காலந் துணியப்படவே அவனவைக்களத்திருந்த புலவர் காலமுந் துணியப்பட்ட வாறாகும்.

கி - பி ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த ஹான்ஸ்தாங் என்னுஞ் சீனவித்தியார்த்தி, சிலாதித்தியன் என்னும் அரசன் கி-பி ௫௮௰ இல் செங்கோலோச்சினானெனவும், விக்கிரமாதித்தன் அவ்வரசனை யடுத்து அவற்கு முன் அரசு செலுத்தினானெனவுங் கூறினார். †

கி - பி பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்த கல்கலன் என்னுஞ் சரித்திரகாரரும் கி - பி, ௭௮ - இல் அரசாண்ட கானிஷ்க வேந்தனுக்கு முப்பது ஆறாண்டைக்குப் பின்னே விக்கிரமாதித்த னிருந்தனனென வுரை கூறினார். இவ்விருவருரையாலும் விக்கிரம மன்னன் கி - பி ஐந்தல்லது ஆறாம் நூற்றாண்டி லிருந்தா னென்பது பெறப்படும்.

---

* Vide Max Muller's 'India what can it teach us ?'

† ,, Dutt's Civilisation of Ancient India, vol. 2.

இன்னுங் காளிதாசரை யடுத்து அவர்க்குப் பிற்றோன்றிய **சுபந்து** என்னும் புலவர் தாமியற்றிய செய்யு ளொன்றில் விக்கிரமாதித்தன் தமது காலத்தை யடுத்துத் துஞ்சினு னெனுங் குறிப்புத் தோன்றக் கூறுதலானும், இரண்டாஞ் **சந்திரகுப்தன்** என்னும் மறுபெயர் பூண்ட விக்கிரமாதித்த வேந்தன் வழங்குவித்த கல்வெட்டுக்களும் முத்திரைக் காசுகளும் கி - பி ௪௦௦ முதல் ௪௧௩ வரையில் உலாவப் பெற்றன வென்பது புலப்படுதலானும் * இவ்வேந்தன் ஐந்தாம் நூற்றாண்டின் றொடக்கத்தி லிருந்தா னென்பதே ஒருதலையாகத் துணியற் பாலதாம். இங்ஙன மிவன் ஐந்தாம் நூற்றாண்டின் றொடக்கத்தி லிருந்தா னென்பது பெறப்படவே, இவனவைக்களத் திருந்த புலவர் பெருமானான காளிதாசரும் அவ்வைந்தாம் நூற்றாண்டின் றொடக்கத்தி லிருந்தா ரெனவே தெற்றெனத் துணியப்படும்.

இன்னுங் காளிதாசரோடு ஒருங்கிருந்த **வராகமிகிரர்** என்னும் வானசாஸ்திரியார் கி - பி ௫௦௭ - இற் பிறந்து ௫௮௭ - இல் இறந்தாரென நாட்டப்பட் டிருத்தலின், காளிதாசர் கி - பி ஐந்தாம் நூற்றாண்டின் றொடக்கத்தி லிருந்தா ரென்பது ஐயுறவின்றித் தேறப்பட்ட முடிபொருளாம் என்க.

சென்னை,<br>
15—4—1907. } **நாகபட்டினம். வேதாசலம் பிள்ளை.**

---

* Vide, A. A. Macdonell's Sanscrit Literature.

अनाघ्रातं पुष्पं.

மோவா மலரோ நகங்களை யாத முழுமுறியோ
ஆவா கருவி துருவாது பெற்ற அருமணியே
நாவாற் சுவையாப் புதுநற வோசெய்த நற்றவங்கள்
தாவா தொருங்கு திரண்டுவந் தாலன்ன தையலரே.

இத்தகையதோர் அரியபொருளை நுகருதற்கு உரியநல்வினை யார்க்கு உளதோ தெரியவில்லையே.

விதூஷகன். அப்படியா, அப்படியாயின் நீர் உடனே விரைவாய் முயலக்கடவீர்! இங்குதி நெய்யைத் தலையில் தடவிக்கொள்ளும் ஒரு தவசிகையில் அவள் அகப்பட்டுக் கொள்ளும்படி விட்டு விடாதீர்.

துஷியந்தன். அப்பெண்மணி தன் கருத்தின்படி நடக்கக் கூடாதவளா யிருக்கின்றாள்; அவள் தந்தையும் இப்போது இங்கில்லை.

விதூஷகன். நல்லது, உம்மைக் கண்டபொழுது அம்மாதின் உள்ளக் குறிப்பு அவள் கண்களில் எப்படித்தோன்றிற்று?

துஷியந்தன். துறவோர் குடிக்குரிய பெண்கள் இயற்கையிலேயே அச்சமுடையராய் இருக்கின்றனர். ஆயினும்,

* "யான் நோக்குங் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால்,
தான் நோக்கி மெல்ல நகும்:"

இன்னுந்தான் முறுவலிக்கும்போது பிறிதோர் காரணம் பற்றி முறுவலித்தாள்போற் செய்வள்; இங்ஙனம் காதல் நாணத்தினுல் தடைசெய்யப் படுதலின் அவள் அதனை மறைக்கவும் வெளியிடவும் மாட்டாளாயினுள்.

விதூஷகன். உம்மைக் கண்ட வுடனே அவள் உம்முடைய மடிமீது வந்திருக்க வேண்டுமென்று நினைக்கின்றீரோ?

* திருக்குறள், காமத்துப்பால்.

**துஷியந்தன்.** திரும்பவும் அவள் தன் தோழியரோடு போம்பொழுது நாணத்தினால் மிகவும் தடைப்படினுந் தன் உள்ளக் குறிப்பை நன்கு வெளியிடுவித்தாள்; என்னை? அம் மெல்லியாள் சில அடி எடுத்துவைத்த பின் சடுதியிலே தன் காலில் தருப்பைப் புல்லின் முனை குத்திற்றென்று நின்று விட்டாள்; அங்ஙனம் நிற்கையில், முட்செடி மேலேபடா திருக்கவும் தன்மரவுரியாடையை அதனினின்றும் விடுவிப்பாள் போல என்னைத்திரும்பி நோக்கினாள்.

**விதூஷகன்.** அப்படியாயின் வழிப்பயணம் போவதற்கு நீர் மூட்டை கட்டிக்கொண்டு ஆயத்தமாயிரும். தபோவனத்தைப் போகநுகர்தற் கேற்ற பூஞ்சோலை யாக்கி விட்டீர்.

**துஷியந்தன்.** நண்பனே, நான் இங்கிருப்பது தவசிகள் சிலர் அறிவர்; ஒரு காரணத்தை முன்னிட்டு நாம் திரும்பவும் துறவாசிரமத்திற் செல்ல ஓர் உபாயங் கண்டு சொல்.

**விதூஷகன்.** வேறென்ன காரணம் வேண்டும்? நீர் தாம் அரசனாயிற்றே.

**துஷியந்தன்.** அதனால் என்னை?

**விதூஷகன்.** காட்டுத் தானியத்தில் ஆறிலொருபாகந் துறவிகள் செலுத்தவேண்டுமெனப் போய்ச் சொல்லுமே.

**துஷியந்தன்.** ஆ மடவோய்! நவமணிக்குவியல்களைக் காட்டினும் மிகச் சிறந்ததோர் கூறு அவர்களைக்காப்பதனால் நமக்கு வருகின்றதே. பலவகைப்பட்ட சாதியாரிடத்தினின்றும் பெறப்படுகின்ற அரசிறைப்பொருள் அழிந்து போவதும், துறவோர் தாமியற்றுந் தவப்பயனில் ஆறிலொரு கூறாய்க் கொடுக்கும் பொருள் என்றும் அழியாமையும் ஆராய்ந்துபார்.

(நினைத்துப் பின்னே.)

நன்று! நன்று! நங்கருத்து நிறைவேறியது.

துஷியந்தன். (உற்றுக்கேட்டு) அமைந்த இக்குரல் ஒலியினால் வருகின்றவர் துறவிகள் என்று புலப்படுகின்றது.

(வாயில் காப்போன் புகுதுகின்றான்.)

வாயில்காப்போன். அரசனுக்கு வெற்றி சிறக்க! வாயிலில் துறவோர் குமாரர் இருவர் வந்திருக்கின்றார்கள்.

துஷியந்தன். அற்றேல், அவர்களைத் தாமதமின்றிக் கொண்டு வருக.

வாயில்காப்போன். இதோ செய்கிறேன். (வெளியே போய்த்திரும்ப அவ்விருவருடனும் புகுதுகின்றான்) சுவாமிகாள்! இவ்வழியே வாருங்கள், இவ்வழியே வாருங்கள்.

(இருவரும் அரசனைப் பார்க்கின்றனர்.)

ஒருவர். ஓ ஈது என்ன வியப்பு! இவர் மேனி சுடர் ஒளியால் துலங்குகின்றது; ஆயினும், இவரிடத்தில் நமக்கு அச்சந் தோன்றவில்லை. இவர் பெரும்பாலும் ஓர் முனிவரை ஒத்திருப்பதனால் ஈது இவர்க்கு இயற்கையே யாகும். தம்மிடத்து விருந்து வருவோரை உபசரிக்கும்பொருட்டுத் துறவிகள் எல்லாரும் அணுகி இன்புறுதற் கேதுவாயுள்ள ஆசிரம வாழ்க்கை யுடையரா யிருத்தல்போல, எல்லாரும் நிலைக்களனாயடைந்து காவல் எய்துதற்குக் காரணமான இல்வாழ்க்கையினை இவரும் அனுசரித்திருக்கின்றார். துறவிகள் தவ ஒழுக்கத்தைப் பாதுகாத்தலால் பெரும் புண்ணியத்தை ஈட்டிக்கொள்ளுதல் போலவே இவரும் உலகபாலனம் பண்ணுதலால் பெரும் புண்ணியத்தைத் தொகுத்துக் கொள்ளுகின்றார். எப்படியானால் துறவோர்க்கு உரிய 'ருஷி' என்னும் சிறப்புப்பெயர் எல்லாவிடங்களினும் எல்லாராலும் புகழ்ந்து பாடப்படுகின்றதோ, அப்படியே இவரும் அவா அறுத்தமையாற் பெற்ற 'ராஜருஷி' என்னுஞ் சிறப்புப் பெயரும் விண்ணுலகத்தில் அடுத்தடுத்து உபய சாரணர்களாற் பாடப்பெறுகின்றது.

இரண்டாமவர். ஏ கௌதமா! இந்திரன் நேசரான துஷியந்தன் என்பார் இவர்தாமோ?

முதலவர். ஓம்.

இரண்டாமவர். ஆ உண்மையே! தாம் ஒருவரேயாயினும் இவர் கணையமரம்போற் பருத்து நீண்ட தம் தோள்களால் நாற்புறமுங் கரியகடலை எல்லையாக உடைய நில முழுவதையும் ஆண்டு வருதல் ஒரு வியப்பு அன்று. அரக்கரோடு பகைகொண்டிருக்கும் தேவர் கூட்டங்களெல்லாம் இவரது நாண் ஏறிட்ட வில்லையும் இந்திரனது வச்சிரப்படையையும் நம்பியன்றோ வெற்றியடைவோமென்றுஎண்ணியிருக்கிறார்கள்!

இருவரும் (அருகேவந்து) ஓ அரசரே! நுமக்கு வெற்றி உண்டாகுக.

துஷியந்தன். (தன் இருக்கையினின்றும் எழுந்து) நுங்கட்கு வந்தனம் புரிகின்றேன்.

இருவரும். உமக்கு மங்களம் உண்டாகுக! (பழங்களைக் கையுறையாகக் கொடுக்கின்றனர்.)

துஷியந்தன். (அவற்றை வணக்கமாய் ஏற்று) தங்கள் கட்டளைக்கு எதிர் பார்த்திருக்கின்றேன்.

இருவரும். ஆசிரமத்திலுள்ள முனிவர் நீர் இங்கிருப்பதை அறிவர்; ஆகையால் நும்மை இங்ஙனம் வேண்டுகின்றார்கள்—

துஷியந்தன். அவர்கள் கட்டளை யாது?

இருவரும். மாமுனிவரான கண்ணுவர் இங்கு இல்லாமையினாலே இராக்கதர்கள் நாங்கள் செய்யும் வேள்விகள் நடைபெற வொட்டாமல் இடையூறு செய்கிறார்கள். ஆகையால் நீர் தயை புரிந்து நுமது தேர்ப்பாகனோடும் இவ்வாசிரமத்தில் வந்து சில இரவு தங்கியிருந்து பாதுகாக்க வேண்டும்.

**துஷியந்தன்.** கட்டளையிட்ட வண்ணமே இருக்கிறேன்.

**விதூஷகன்.** (மறைவாய் அரசனிடத்தில்) இப்போது இவ்வேண்டுகோள் நமக்கு அனுகூலமா யிருக்கின்றது.

**துஷியந்தன்.** இரைவதகா! நான் சொன்னேனென்று தேர்ப்பாகனிடம் சொல்லி வில்லுங்கணையும் எடுத்துக்கொண்டு தேரைச் செலுத்தி வரச்செய்.

**வாயில்காப்போன்.** மகாராசா உத்தரவுப்படியே (போகிறன்.)

**இருவரும்.** (மகிழ்ச்சியோடு) நம்முடையமுன்னோரைப் போல் நமது கடமையைச் செய்வது நமக்கு நிரம்பவும் தகுதியே; இடர் உற்றவர்களுக்கு அதனை நீக்கி உதவி செய்தலிலேயே புருவமிசத்திற் பிறந்தோர் தம்மைத் தீக்ஷை செய்து கொண்டிருக்கின்றார்கள்.

**துஷியந்தன்.** நீங்கள் முன்னே போகலாம். நானும் இதோ உங்கள் பின்னே வருகின்றேன்.

**இருவரும்.** நமக்கு வெற்றி சிறக்க! (போய்விடுகின்றார்கள்.)

**துஷியந்தன்.** மாதவிய! உனக்குச் சகுந்தலையைப் பார்க்க விருப்பமுண்டா?

**விதூஷகன்.** முன்னே கேட்ட போது பார்க்கவேண்டுமென்னும் அவா கரைகடந்து ஒழுகியது; இப்போது இராக்கதர்களைப் பற்றிக் கேட்டவுடன் அஃது ஒரு துளிகூட இல்லாமற் போயிற்று.

**துஷியந்தன்.** அடா! ஒன்றுக்கும் அஞ்சாதே; நீ என் அருகிலேயே இருப்பாயன்றோ?

**விதூஷகன்.** அப்படியானால் இங்கே இராக்கதர்களுக்குத் தப்பிப்பிழைத்தேனே?

## மூன்றும் வகுப்பு

களம். இளமரக்காவின்கண் உள்ள ஒரு அறவாசிரமம்.

கண்ணுவமுனிவர் வேள்வி செய்யும் சீடன் ஒருவன் வருகின்றான்.)

சீடன். (தசைப்புல் அறுத்துக்கொண்டு) ஆ துஷியந்த மன்னன் எவ்வளவு வல்லவனு யிருக்கின்றான்! மாட்சிமை தங்கிய அம்மன்னன் இவ்வாசிரமத்திற் புகுந்தவுடனே, நம்முடைய வேள்விச் சடங்குகளின் இடையூறுகளெல்லாம் ஒழிந்தன. வில் தன் உங்கார ஓசையால் வெருட்டுதல் போல, நாணைத்தெறிக்கும் ஓசை மாத்திரத்தினுலேயே தூரத்தில் வரும் தடைகளை எல்லாம் ஓட்டி விடுகிறானென்றால், கணையைத் தொடுத்தானுயின் எப்படியாகுமென்று சொல்லவேண்டுவதேன்! நல்லது, இக்குசைப்புல்லை எடுத்துக் கொண்டுபோய்ப் பலி பீடத்திற் பரப்பும் பொருட்டு வேட்கு மாசிரியரிடம் (இருத்துவிக்குகளிடம்) கொடுக்கிறேன். (சுற்றிப்போய் நிமிர்ந்து பார்த்து) பிரியம்வதே! கிள்ளப்படாத தண்டோடு இத்தாமரை இலைகளையும் உசிரத்தோடு சாந்தினையும் யாருக்காகக் கொண்டு போகின்றாய்? (உற்றுக்கேட்டு) யாது சொல்லுகிறாய்? வெயிலிற் சென்றதால் உண்டான வெப்பம் பொறுக்கமாட்டாமல் சகுந்தலை மிக வருந்துகின்றனளென்றும், அதனால் அவள் உடம்பைக்குளிரச் செய்வதற்காக இவற்றை எடுத்துப்போகின்றேன் என்றும் சொல்லுகிறாயோ? அப்படியானுற் பத்திரமாய்ப் பார்; அவள் கண்ணுவமா முனிவர்க்குப் பிராணனாய் இருக்கின்றாள். நானும் வேள்விச்சாலையின் பரிசுத்த தீர்த்தத்தை அது தணியும்படி கௌதமி அம்மையார் கையிற் கொடுத்து அனுப்புகின்றேன். (போகிறான்.)

தனியுரை முடிந்தது.

---

(காமநோயால்வருந்துவோன்நிலையில் துஷியந்தன் வருகின்றான்.)

துஷியந்தன். (நெட்டுயிர்ப் பெறிந்து) தவத்தின்பெருமை இன்னதென்றும் நான் அறிவேன்; அப்பெண் தன் விருப்பப்படி நடக்கக் கூடாதவளென்றும் நான் அறிவேன். அங்ஙனமாகவும், என் நினைவை அவளிடமிருந்தும் என்னால் திருப்ப முடியவில்லையே! (காமவருத்தந் தாங்காமல்)

களிவளர் தெய்விக காம தேவனே!
எளியன்மேற் சிறிதுநீ இரங்கல் இல்லையால்;
ஒளிவளர் மலர்க்கணை உறப்பொருந்துநீ
அளியிலை கொடியையென் றாய தென்கொலோ!

(நினைத்துப்பார்த்து) ஆ! நன்றாய் அறிந்தேன்.

விரிகட லடியிற் புதைந்தவெந் தழல்போல் வெகுண்டசிவன்
எரிவிழிகான்ற கொழுந்தீ நினது அகத்து எரிகின்றதால்;
பொரிபடவெந்து சாம்பர் ஆயினை யெனிற் பொறாதஇடர்
புரிவாய்! எமை வெதுப்பல் எவ்வாறு உனக்குப் பொருந்
[தியதே?

பூங்கணை வாய்ந்த புத்தேள்! நீயும் புதுமதியும்
ஈங்குள மக்கட்கு இன்பந் தருவீர் எனஎண்ணி
ஏங்கிய காதலர் எல்லாம் ஏமாந்தனரானார்;
தாங்காக் காதல் என்போன் மாந்தர் தளர்வாரே.

மலரைக் கணையாய் உடையாய் எனநீ வருகுதலும்
அலர்தண் கதிரோன் அவனென்று அறையும் அவ்வுரையும்
இலவாம் பொய்யே எம்போல் வார்க்குஅவ் வெழின்மதியம்
உலர்வெந் தீயே பொழியும் உறுதண் கிரணத்தால்.

நீயோ மலர்வெங் கணையை இடிபோல் நிறைக்கின்றாய்
ஆவா மருட்டும் அலர்கண் மடவாள் பொருட்டாக
ஓவாது எனைநீ புடைக்கின் றமையால் உயர்மீனப்
பூவார் கொடியாய்! என்றாற் புகழப் படுவாயே.

(மனத்தளர்ச்சியோடு சுற்றி நடந்து போகிறன்) இன்றைக் குரிய வேள்விச் சடங்குகள் நிறைவேறினமையால் வேட்கும் ஆசிரியர் போகும்படி எனக்கு விடையளித்திருக்கின்றனர்; பேர் உழைப்பினால் இளைப்படைந்திருக்கின்ற யான் எங்கேசென்று ஆறுதல் அடைவேன்? (நெட்டுயிர்ப்பெறிந்து) என் காதலியைக் காண்பதைவிட எனக்கு வேறு என்ன ஆறுதல் இருக்கின்றது? நல்லது, அவள் இருக்கு மிடத்தைநாடிப்போவேன். (கதிரவனைப் பார்த்து) வெம்மை மிகுந்த இந் நண்பகற் காலத்தைச் சகுந்தலை தன் தோழிமாரோடு, பச்சிளங்கொடிப் பந்தரால் மூடப்பெற்ற மாலினி யாற்றங் கரையிலேதான் கழிப்பள். இப்போது நான் அங்கே செல்வேன். (சுற்றிப்போகிறன் - தென்றற்காற்றின் பரிசத்தாற் பிறந்த இன்பத்தைத் தெரிவிக்கின்றன்.) ஆ! புதுத் தென்றல் எப்போதும் உலாவப் பெறுகின்ற இவ்விடம் எவ்வளவு இனியதா யிருக்கின்றது!

முகைஅவிழ்க்கும் தாமரையின் முதிர்மணத்தின் அளைந்து
மிகைபடுநீர் மாலினியின் விரிதிரைநுண் டுளிவீசுந்
தகையினிய இளந்தென்றல் தனிக்காம எரிவெதுப்புந்
தொகையுடம்பிற் றழுவுதற்குத் தொலையாத வளமுடைத்
[தே.

(சுற்றிப்போய்ப் பார்க்கிறன்) பிரப்பங் கொடியால் வளைக்கப் பட்ட இப்பச்சிளங் கொடிப்பந்தரிலேதான் சகுந்தலை பெரும்பாலும் இருக்கவேண்டும்; ஏனெனில், இதன்வாயில் முற்றத்தே பரப்பப்பட்டிருக்கும் வெண் மணலில் அவள் தொடைகளின் கனத்தால் பின்புறம் ஆழ்ந்தும் முன்புறம் உயர்ந்தும் இப்போது தான் பதிந்திருக்கின்ற அடிச் சுவடுகள் வரிசையாகக் காணப்படுகின்றன. நல்லது இக்கிளைகளின் பின்னே யிருந்து பார்க்கின்றேன். (சுற்றிப்போய் அவ்வாறே பார்த்து - களிப்போடு)

விழிகளாற் பெறாஉம் அழிவில் பேரின்பம்
ஆஅ! பெரி தெய்தினென் மாதோ தூஉய
வெள்ளொளிக் கல்லின் ஒண்மலர் பரப்பித்
தோழியர் மருங்கிற் சாஅயஎன்
இன்னுயிர்ச் செல்வியைக் கண்ணுறலானே.

நல்ல திருக்கட்டும். அவர்கள் யாதுந் தடையின்றிப் பேசுவனவற்றைக் கேட்கின்றேன். (பார்த்துக்கொண்டே நிற்கிறன்.)

(முன்சொன்னவாறே சகுந்தலையும் அவள் தோழிமாரும் இருந்துகொண்டு பேசுகின்றனர்.)

தோழிகள் (விசிறிக்கொண்டே) அன்புள்ள சகுந்தலா! இந்தத்தாமரை இலைகளிலிருந்து வரும் காற்று உனக்குச் சுகமாக இருக்கின்றதா?

சகுந்தலை. என் தோழிமார் எனக்கு என்விசிறுகின்றனர்?

(தோழிமார் மனத்துயரத்தோடு ஒருவரை யொருவர் பார்க்கின்றனர்.)

துஷியந்தன். உண்மையாகவே இந்நங்கை தேகசுகமின்றி இருப்பதாகவே தெரிகின்றது. (ஊகித்துப்பார்த்து) இது கதிரவன் வெப்பத்தால் உண்டாயதோ அல்லது என் உள்ளத்திலுள்ளதுபோற் காமவெப்பத்தால் வந்ததோ? (ஆசையோடு உற்றுநோக்கி) ஆ! சந்தேகம் ஒழிந்தது.

நறுமண உசீரம் நகிலமேல் அணிந்துந்
தாமரை நாளங் காமரு கையிற்
பவளக் கடகமெனத் துவள வளைத்தும்
என், ஆருயிர்க் காதலி ஒரயர் வுறினும்
எழில்மிகு செவ்வியள் மாதோ கழிபெருங்
காதல் பயந்த ஏதமுறு நோயுஞ்

சுடுகதிர்க் கனலி அடும்பெரு வருத்தமும்
ஒன்றென மொழிவ ராயினும் என்றாழ்
பொழிகதிர் வருத்த மிதுபோல்
மழவிள மகளிர்க்கு அழகுபயந் தின்றே.

பிரியம்வதை. (அப்புறமாய்) எடி அனசூயே! சகுந்தலை அந்த ராஜருஷியைக்கண்ட நாள்முதல் மனக்கவலை கொண்டதுபோல இருக்கிறாள். இவளுக்கு உண்டான இந்தவருத்தம் அவர் பொருட்டு வந்ததாக இருக்கலாமோ?

அனசூயை. சகீ! என் மனத்திலும் அப்படித்தான் சந்தேகம் உண்டாகிறது. நல்லது, நான் அவளைக் கேட்கிறேன். (உரக்க) தோழி! நான் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். நீபடுகிற துன்பமோ பெரிதாயிருக்கிறதே.

சகுந்தலை. (மலர்ப்பாயலினின்றுஞ் சிறிதேதலையைத்தூக்கி) தோழி! நீ யாது சொல்ல விரும்புகின்றாய்?

அனசூயை. அன்பிற்குரிய சகுந்தலா! காதலைப் பற்றிய தொன்றும் நமக்கு அனுபவமாய்த் தெரியாது; ஆனால் இதிகாசங்களிலே காதல் வசப்பட்டவர்கள் அடையுந் துன்பத்தைப்பற்றி நாம் அறிந்ததெல்லாம் இப்போது உன் நிலைமையோடு ஒத்திருக்கின்றது. எனக்குச்சொல். இந்தத் துன்பம் வருதற்குக் காரணம் யாது? ஏனென்றால், நோய் வந்ததற்கு உண்மையான காரணம் தெரியாமல், அதற்கு மருந்து கொடுக்க முடியாதே.

துஷியந்தன். நான் கருதிய வண்ணமே அனசூயையுங் கருதுகின்றனள்.

சகுந்தலை (தனக்குள்) எனக்குள்ள காதலோ மிகவும் வலிவுடையதாயிருக்கின்றது; அதைப்பற்றி என் தோழிமாருக்கும் நான் உடனே சொல்லக்கூடவில்லையே.

பிரியம்வதை. தோழி! அவள் சொல்லுகிறது நல்லதுதானே: உன்னுடைய நோயை நீ என் அலட்சியஞ்செய்கிறாய்? நாளுக்குநாள் உன்னுடைய அவயவங்கள் மெலிந்து போகின்றன; உனதுஅழகியநிறம்மாத்திரம் குறையவில்லை.

துஷியந்தன். பிரியம்வதை உண்மையே சொல்லுகின்றாள்.

வண்மலர்க் கன்னமும் வறண்டு வற்றின
திண்ணிய கொங்கையுந் திறந் திரிந்தன
நுண்ணிய நடுவுமேல் நுணுகிப் போயின
வண்ணமும் வெளிறின தோளும் வாடின;

உருக்கிளர் இளந்தளிர் உலரத் தீய்த்திடு
பொருக்கெனுந் தீவளி பொருந்த வாடிய
மருக்கமழ் மல்லிகை போன்ற மாதர்பால்
இரக்கமும் இன்பமும் ஒருங் கெழுந்தவே.

சகுந்தலை. நல்லது, வேறு யாருக்குத்தான் சொல்லப் போகின்றேன்! இப்போது உங்களுக்குப் பிரயாசை கொடுக்கிறவளாகின்றேன்.

இருவரும். நாங்கள் இப்படி உன்னை வலுகட்டாயம் பண்ணுவது நியாயந்தான். துன்பத்தை மற்றவர்களுக்குத் தெரிவித்தால் அதனால் ஆறுதல் உண்டாகிறதே.

துஷியந்தன். (மகிழ்ச்சியோடு) எதனைக் கேட்க வேண்டுமென விழைந்தேனோ அதனையே கேட்டேன்.

வேனில் கழிந்த வுடனே விரிகடல்நீர்
வானம் பருகி வருகார்நாள் மன்னுயிருக்
காணு மகிழ்வு தரல்போல் அடுங்காதல்
ஏனை எனக்கும் இன்பம் பயந்ததுவால்.

சகுந்தலை. நல்லது, நான் சொல்லியது உங்களுக்குப் பொருத்தமாயிருந்தால் அவ்விராஜ ருஷியின் அருளுக்கு யான் பாத்திரமாகும்படி எது செய்ய வேண்டுமோ அதனைச் செய்யுங்கள்; இல்லையேல், எனக்கு எள்ளுந் தண்ணீரும் இறைத்து விடுங்கள்.

துஷியந்தன். இச்சொற்கள் என் ஐயமெல்லாம் போக்கின.

பிரியம்வதை. (அப்புறமாய்) அனசூயே! இவள் காமநோய் அளவு கடந்து பெருகி விட்டதால் காலதாமதமாவதை இவள் பொறுக்கக்கூடாதவளாயிருக்கின்றாள். இவள் யார்மேல் தன் மனத்தைப் பதிவைத்திருக்கின்றாளோ அவர் புருவமிசத்திற்கு ஓர் அணிகலம்போற் சிறந்து விளங்குகிறார்; ஆகையால், இவள்கொண்ட காதல் நம்மால்ஏற்றுக் கொள்ளப்படுவது நியாயமே.

அனசூயை. (அப்புறமாய்) எடி! நீசொல்லுகிறபடியேயாகட்டும் (உரக்க) தோழி! அதிட்ட வசமாய் நீ தகுந்த இடத்தில் ஆசைவைத்தாய். ஒரு பேரியாறு கடலில் அல்லாமல் மேறு எங்கே போய்விழும்?

பிரியம்வதை. தளிர்த்த மல்லிகைக்கொடியைத் தேமாமரம் அன்றி வேறுமரம் அணையப் பெறுமா?

துஷியந்தன். விசாகமீன் மூன்றும் பிறையைப் பின் பற்றிச் சென்றால் அதுவும் ஒரு வியப்பாகுமா?

அனசூயை. நம்முடைய தோழியின் எண்ணத்தை விரைவாகவும் இரகசியமாகவும் நிறைவேற்றுதற்கு என்ன வழி செய்யலாம்?

பிரியம்வதை. 'இரகசியந்' தான் யோசிக்கவேண்டியது: விரைவாகச் செய்தல் எளிது.

அனசூயை. எப்படி? எப்படி?

பிரியம்வதை. அன்போடு கூடிய பார்வையினால்இவள் மேல் தனக்குள்ள காதலை வெளிப்படுத்தும் அவ்விராஜருஷி சிலநாளாக உறக்கம் இன்றி மெலிந்திருப்பது உண்மையல்லவா.

துஷியந்தன். உண்மையாகவே நான் அப்படித்தான் ஆய்விட்டேன்.

கைமேற் றலைவைத் திரவிற் கிடக்கக் கடைக்கணின்று
பெய்நீர் அழற்ற நிறந்திரி வான பெருமணிகள்
மொய்பொற் கடகம்வில் நாண்டமும் புற்ற முனைநழுவிச்
செய்யில் உரிஞ்சப் பலகால் எடுத்துச் செறிக்கின்றனே.

பிரியம்வதை. (நினைந்துப்பார்த்து) ஏடி! இவள் தன் காதலைத் தெரிவித்து ஓர் இலிகிதம் எழுதட்டும்; அதனை மலர்களின் இடையே மறைத்துக்கொண்டுபோய்த் தேவப் பிரசாதம் என்று அவர் கையிற் கொடுத்து விடுகிறேன்.

அனசூயை. இந்த நல்லயுத்தி எனக்குப் பொருத்தமாயிருக்கின்றது. ஆனாற் சகுந்தலை யாது சொல்லுகிறாளோ?

சகுந்தலை. நீங்கள் சொல்வதை நான் சந்தேகப் படுவதும் உண்டோ?

பிரியம்வதை. அப்படியானால் நல்லது, நீ உன் காதலைக் காட்டி அழகிய சொற்களால் ஒரு பாட்டு எழுதுவதற்குச் சிந்தனைசெய்.

சகுந்தலை. அப்படியே செய்கிறேன்; ஆனால் அவர் என்மேற் பற்றின்றித் தவிர்த்து விடுவரோ என எண்ணி என் நெஞ்சம் கலங்குகின்றது.

துஷியந்தன்.

உன்மேற்பற்றின்றி உவர்ப்பான் எவனென உன்னினையோ
அன்னான் நின்கூட்டம் விழைந்திங்குளான் அஞ்சும் ஆரணங்
பொன்னாள் தனை நயப்போனை மறுப்பினும் போவதற்கம் [கே!
மின்னாள் விரும்பப்படுவோன் அவளை வெறுத்தலின்றே.

தோழிமார். தன்னுடைய நலங்களைத் தானே இகழ்ந்து பேசுகிற ஓ சகி! உடம்பைக் குளிரச் செய்கிற வேனிற் கால முழுமதி நிலவை யார் தாம் தம் ஆடைமுன்றானையால் மறைப்பார்?

சகுந்தலை. (புன்சிரிப்போடு) நல்லது இப்போது நான் செய்யுள் இயற்றத் தொடங்குகின்றேன் (இருந்து சிந்திக்கின்றாள்.

துஷியந்தன்.

நொடிசிமிழா விழியால்என் காதலியை நோக்குங்கால்
வடிநீள்சொற் கவிதொடுக்கும் வண்மையில் அன்னாள் முகத்
கொடிபோல் ஒருபுருவம் மேல்நெறிந்து குலவியிடப் [துக்
பொடியுங் கதுப்பென் மேற் காதல் புலனாக்குமால்.

சகுந்தலை. தோழிகாள்! ஒரு கவியைச் சிந்தித்து இயற்றிவிட்டேன்; ஆனால், எழுது கருவிகள் ஒன்றும் அருகே இல்லையே.

பிரியம்வதை. கிளிப்பிள்ளையின் மார்புபோல் மெதுவாயிருக்கின்ற இத்தாமரை இலையில் உன் கைநகங்களால் அப்பாட்டைப் பொறித்து விடுகிறதுதானே.

சகுந்தலை. (அப்படியே செய்து) தோழிகாள்! போது இதன் பொருள் பொருத்தமா யிருக்கின்றதா? கேளுங்கள்!

இருவரும். அப்படியே சித்தமா யிருக்கிறோம்,

சகுந்தலை. (படிக்கிறள்.)

இரக்கமிலா அரசே! நான் என் செய்வேன்! இரவுபகல்
எரிக்கின்று னென்உடம்பை எழிற்காமன் நின்மேலே
பெருக்கின்ற தென்ஆசை பேதையேன் நின்நெஞ்சம்
இருக்குமா றுணர்ந்திலேன் எனக்கதனை இயம்புதியோ.

துஷியந்தன். (உடனே அவளிடம்போய்.)

மெல்லியலாய்! நின்னையவன் மேன்மேலும் எரிக்கின்றான்,
சொல்லவொணு வகையாக என்னையோ சுடுகின்றான்;
அல்லொழிந்த விடிநாளில் அழிமதியை வாட்டுதல்போல்
எல்லவன் மற்றதன்மனை அல்லியை வாட்டவில்லையே.

தோழிமார். (அரசனைப் பார்த்ததும் மகிழ்ச்சியோடு எழுந்து) தாமதமின்றி எம் இஷ்டப்படி வந்த அரசர்க்கு நல்வரவாகுக!

(சகுந்தலையும் தன் மலர்ப்பாயலினின்று எழவிரும்புகிறள்.)

துஷியந்தன். வேண்டாம், வேண்டாம் வருத்தப்பட்டு எழுந்திராதே நங்காய்! மிகுந்த வெப்பத்தால் வருந்துகின்ற நின் அவயவங்கள்பட்டு இம்மலர்ப்பாயல் தீய்ந்து போயிருக்கின்றது; மேலும் அவற்றின் கீழ்ச் சிதறிக்கிடந்து வதங்குகின்ற தாமரை இதழ்கள் அவற்றிற்கு மணம் தருகின்றன; இத்தன்மையாக இருக்கும் அவை என்னை உபசரித்தற் பொருட்டு மேலும் வருத்தப்படுவதாகாது.

அனசூயை. எங்கள் தோழர் எங்கள்மீது தயை கூர்ந்து இந்தக் கற்றலத்தின் ஒருபுறம் இருப்பாராக.

(அரசன் அவ்வாறே இருக்கச் சகுந்தலை நாணத்தோடும் எழுந்து நிற்கின்றள்.)

பிரியம்வதை. உங்களிருவர்க்கும் உள்ள நேச உரிமையானது தெற்றென விளங்குகின்றது; ஆயினும் என்

தோழிமேல் உள்ள பிரியமானது அதனையே திரும்பவும் பேசும்படி என்னைச் செய்கின்றது.

**துஷியந்தன்.** நன் மாதராய்! அதனைப்பேசாமலிருக்கவேண்டாம்; தாம் பேசவேண்டுவதைப் பேசாவிட்டாற் பின் அது நினையும்போது வருத்தத்தை விளைக்கும்.

**பிரியம்வதை.** தன் செங்கோல் நீழலின்கீழ் வாழ்வோர்க்குத் துன்பம் நேர்ந்தால் அதனைத் துடைக்கவேண்டுவது அரசற்கு உரிய பெருங் கடமையாமே.

**துஷியந்தன்.** இதைவிட வேறென் இருக்கின்றது?

**பிரியம்வதை.** அப்படியாயின், எங்கள் அன்பிற் சிறந்த தோழி உங்கள்மேற்கொண்ட தெய்வக் காதலினால் இங்ஙனம் வேறுபட்ட நிலையுடையளாயினள்; ஆகையால், அவள்மேல் தலையளி புரிந்து அவளுயிரைக் காப்பாற்றியருளும்.

**துஷியந்தன்.** நல்லாய்! இவ்வேண்டுகோள் நம் இருவர்க்கும் பொதுவேயாகும்; ஆயினும், பலவகையாலும் நான் உங்கட்குக் கடமைப்பட் டிருக்கின்றேன்.

**சகுந்தலை.** (பிரியம்வதையைப் பார்த்து) தமது அந்தப்புரத்திலுள்ள மகளிரைப் பிரிந்தமையால் வருந்தி இருக்கின்ற இவ் அரசரை வருத்தப்படுத்தவேண்டாம், விடு.

**துஷியந்தன்.**

ஒருகணமும் என்உளத்திற் பிரியாதாய்! உனைக்காண்பார்
மருளமனம் பேதுறுக்கும் மதர்விழியாய்! நினையன்றிப்
பெரியபொருள் பிறிதறியா என்னெஞ்சைப் பிறிதறிந்தால்
எரிவேடன் கணைகொல்ல இனைகின்றேன் பிழைப்பெனோ!

**அனசூயை.** நண்பரே! அரசர்க்குக் காதற் கிழத்திமார் பலர் இருப்பரெனக் கேள்வியுற் றிருக்கின்றோம். எங்

கள். பிரிய சகியைப்பற்றி அவள் உறவினர் துயரம் அடையாவிதமாய் நீர் நடந்துகொள்ளும்படி வேண்டுகின்றோம்.

துஷியந்தன். நல்லாய்! மிகுதியாய்ச் சொல்லவேண்டுவதேன்? எனக்குக் காதற்கிழத்திமார்பலர் உளராயினும், என் குலத்திற்கு நிலைபெறச் சிறந்தார் இருவரே யாவர்; இக்கடலை மேகலையாக உடைய நிலமகள் ஒருத்தி, உங்கள் தோழி ஒருத்தி,

இருவரும். நாங்கள் பாக்கியமுடைய மாயினோம்,

பிரியம்வதை (கண்ணுற்குறிசெய்து) ஏடி அனசூயே! இதோ அந்த இளமான்கன்று தன்தாயைத்தேடி இங்கும் அங்கும் மருளவிழிக்கிறதுபார்! நாம்போய் அதனைத் தாயினிடம் சேர்ப்பிப்போம்வா!

(இருவரும்புறப்படுகிறார்கள்)

சகுந்தலை. ஏடிசகிகாள்! நான்துணையின்றி யிருக்கின்றேனே; உங்களில்ஒருவர் என்கிட்டஇருங்கள்.

இருவரும். இந்தநில உலகத்திற்குத் துணையானகாவலர் தாம் உன்அருகில் இருக்கின்றாரே (போய்விட்டார்கள்)

சகுந்தலை. எப்படி, அவர்கள் உண்மையாகவே போய்விட்டார்களே!

துஷியந்தன்.

கண்மணியனையாய்! நின்மனங்கவலேல்; நீ
வேண்டுவன புரிய ஈண்டுநான் உளனால்;
பெருகயர்வொழிக்கும் மரையிலையாக்கிய
ஙளிசிவிறிகொண்டு குளிர்வளிதருகோ;
குமரிவாழையின் அமைவுறுகுறங்கை, என்
மடிமிசைச்சேர்த்திச் செந்தாமரைபுரை

அடிகளிரண்டும் மெல்லெனவருடுகோ;
அழகியதோகாய்! பழுதறஉரையே!

சகுந்தலை. நானே உபசரிக்கவேண்டியவர்கள் என்னை உபசரிக்கும்படிசெய்து யான்குற்றவாளிஆகேன் கண்டீர்!

(எழுந்துபோக எண்ணுகின்றாள்)

துஷியந்தன். ஏடிகட்டழகி! பகல்வெப்பமோ இன்னுந் தணிந்திலது; மலர்ப்பாயலின்கண்ணே கொங்கைமேற்கட்டப்பெற்ற தாமரைஇலைகளையுடைய இந்தநிலையில், மிகஎளிதிலேதுன்புறுதற்கேதுவான மிகமெல்லிய இவ்வவயவங்களோடு இந்தவெயிலில் எங்ஙனம்போவாய்!

(அவளைப்பிடித்திழுத்துத் திருப்புகின்றான்)

சகுந்தலை. புருவமிசத்தவரே! மரியாதையினளவுகடந்துபோகவேண்டாம். யான்காமவசப்பட்டு வருந்துகின்றேனாயினும் யானே எதுவுஞ்சுதந்தரமாய்ச் செய்யக்கூடியநிலையிலில்லை.

துஷியந்தன். அஞ்சுகின்றமாதே! நீ உன்பெரியோர்க்கு அஞ்சவேண்டுவதற்குச் சிறிதுங் காரணமில்லை. மாட்சிமை நிரம்பிய கண்ணுவ முனிவர் அறவொழுக்க விதிகள் முழுதும் உணர்ந்தவராகையால் அவர் இதனை அறிந்தாற் சிறிதுங் குற்றங் காண்பாரல்லர். பார்! இராஜருஷிகளின் புதல்விமார் பலர் கந்தருவமணஞ் செய்துகொண்டாரென்பதும், அஃது அவர் பெற்றோரால் அங்கீகரிக்கப்பட்டதென்பதும் பிரசித்தம் அன்றோ?

சகுந்தலை. சிறிதுநேரம் என்னைவிட்டுவிடும், திரும்பவும் என் தோழிமாரிடம்போய் இதனை அங்கீகரிக்கும்படி கேட்டு வருகின்றேன்.

துஷியந்தன். ஓம், அப்படியே உன்னை விடுகின்றேன்

சகுந்தலை. எப்போது ?

துஷியந்தன்.

கதுவப் படாம விளைதா முளைத்துக் கயங்கெழுமிப்
புதிதே விரிந்த மலரிற் றளும்பிப் பொழிநறவை
அதிதாக வண்டுணல் போலச் சுவையாஅரியஇதழ்
மெதுவே சுவைதமிழ் துண்டணங் கேபின்விடுக்குவெ
[னே.

அவள் முகத்தை உயர்த்த எத்தனிக்க அவளைச் சகுந்தலை தடுக்
கின்றாள்.)

* * * * *

(திரைக்குப் பின்னே)

ஓ பெடைச் சக்கிரவாகமே ! மாலைப்பொழுது வந்து விட்டமையால், நின்கொழுநனிடம் விடைபெற்றுக் கொள்.

சகுந்தலை (உற்றுக்கேட்டுத்துரிதமாய்) பௌரவரே! கனம் பொருந்திய அம்மை கௌதமியார் என் தேகசுகத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டுத் தாமே இதோ வருகிறார், ஆகையால், இந்த மரக்கிளைகளின் பின்னே மறைந்து கொள்ளும்.

துஷியந்தன். நல்லது (அப்படியே தன்னை மறைத்து நிற்கின்றன்.)

(பிறகு கௌதமி தன்கையிற் கலம் ஒன்று எடுத்துக்கொ
ண்டு தோழிகளோடும் வருகின்றள்.

தோழிமார். அம்மே கௌதமீ! இவ்வழியே வாருங்கள், இவ்வழியே வாருங்கள்.

கௌதமி (சகுந்தலை கிட்டப்போய்) குழந்தாய்! நின் அவயவங்களின் வருத்தம் தணிந்ததா ?

சகுந்தலை. சிறிது சிறிதாய்க் குணமுண்டாய் வருகின்றது.

கௌதமி. இத்தருப்பைப் புல்லிற் றெளிக்கும் தண்ணீரால் உன் உடம்புமுற்றிலும் நோய்தீர்ந்து குணப்படும். (சகுந்தலையின் உச்சிமேற் றண்ணீரைத் தெளித்து) குழந்தாய்! மாலைப் பொழுது வந்துவிட்டது, நாம் ஆசிரமத்திற்குப் போவோம்வா.

சகுந்தலை. (தனக்குள்) ஏ நெஞ்சமே! நின்னால் வேண்டப்பட்ட பொருள் நினக்கு எளிதிலே கிடைத்தபொழுது நின் நாணத்தைவிடுத்தாயில்லை. இப்போது நீ அதனைப்பிரிந்து துயரமெய்திப் பரிவடைதல் என்? (சிறிது முன்போய் உரக்க) ஓ என் துன்பத்தைப்போக்கிய கொடிப்பந்தலே! மீண்டும் உன்னிடம் வந்து உன்னோடு இன்பந்துய்த்தற்கு, இப்போது உன்னிடத்தில் விடைபெற்றுக் கொள்ளுகின்றேன். (சகுந்தலை மிக்க துயரத்தோடு எல்லாருடனும் போய் விடுகின்றாள்).

துஷியந்தன். (தான்முன்னிருந்த இடத்திற்குப்போய்ப் பெருமூச்செறிந்து)

விழைபொருள் பெறுதற் கிடையூறு பலவே,
கருமயி ரிறைசேர் பெருவிழி யுகளும் [ணங்கி
வியர்த்தவொண் முகத்தையான் உயர்த்துதொறும் பி
வெறித்தேன் சுவைக்கும் மறுத்துரை மொழிந்து
தவளமுகிழ் விரலாற் பவளவிதழ் பொத்தித்
தோட்புறங் கோட்டின ளதனால் வாய்ப்புற
இதழ்த்தேன் பருகிலன் அந்தோ! அதற்பின்
யாண்டுச் செல்கேன்? காண்டகு காதலி [நோக்கி
முந்தின் புற்றவிப் பந்தர்வயின் அமர்கோ;) சுற்றிலும்
மெல்லுருப் பட்டுப் பல்வயிற் சிதறிய
மென்மலர்ப் பாயலக் கன்மே லுளதால்;

கிளிங்கும் பொறித்த அளிங்கை யிலேக
மரையிலே வாடியிவ் வுழையே யுறுமால்;
நாளக் கடகமவள் தோளிற் கழன்றுவிழுந்து
ஆங்கே கிடந்தன ஈங்கிவை நோக்க
வெறிதே யாயினுஞ் சிறிதொரு போதிற்
சூரற் பந்தரைப் பிரிந்து
வாரற் கென்மனம் வலியில தன்றே.

(திரைக்குப் பின்னே)

ஓ அரசனே ! மாலைக்காலத்திற் செயற்பாலனவாகிய வேள்விக்கடன்கள் தொடங்கி விட்டன; சாயுங்காலத்திற் செக்கர்மேகம்போன்ற அரக்கர்நிழல் எங்குந்தோன்றிப்பல வகையானும் அச்சத்தை விளைவித்துத் தீமூட்டப்பெற்று எரிகின்ற பலிபீடத்தைச் சுற்றிலும் சிதறிச் சுழன்றுகொண்டிருக்கின்றன.

துஷியந்தன். இதோ வருகிறேன் (போய்விடுகிறன்.)

மூன்றும்வகுப்பு முற்றியது.

---



## நான்காம் வகுப்பு.

---

களம்: ஆசிரமத்திற்கு எதிரே ஒரு புல்நிலம்.
(தோழிமார் பூப்பறித்துக்கொண்டு வருகின்றனர்.)

அனசூயை. அன்புள்ள பிரியம்வதே! காந்தருவ விவாக முறையால் சகுந்தலை தனக்கு இசைந்த நாயகனை மணந்து கொண்டதுபற்றி என்மனம் இன்புற்றாலும், பின்னும் இது கவலைக்கு இடஞ்செய்கின்றது.

பிரியம்வதை. எப்படி, எப்படி?

அனசூயை. இங்குள்ள வேள்விக் கடன்கள் முடிந்தமையால் போவதற்குத் துறவிகளால் விடைதரப்பெற்றுத் தன் நகரஞ்சென்று தன் அந்தப்புரமகளிரோடு கூடியிருக்கின்ற அவ்விராஜருஷி இங்குநடந்ததனை இப்போது நினைவு கூர்வரோ.

பிரியம்வதை. நம்பிக்கையாயிரு. அவரைப்போல் உயர் வொழுக்கமுடையோர் ஒருகாலும் அறத்தின் முறைதவறார். இப்போது அப்பா கண்ணுவர் இந்தச்செய்தியைக் கேள்விப்பட்டால் யாது செய்வரோ அறிந்திலேன்.

அனசூயை. யான் அறிந்தவரையில் அவர் அதனை அங்கீகரிப்பார் எனத் தோன்றுகின்றது.

பிரியம்வதை. எப்படி?

அனசூயை. தம்மகளைத் தகுந்த நாயகனுக்குக் கொடுக்கவேண்டுமென்பதுதான் முதன்மையான விருப்பம்; அதிட்டவசத்தால் அதுதானே கைகூடுமாயின், பெரியவர்களுக்குயாதுஞ்சிரமமின்றி அதுமுடிந்ததேயன்றோ.

பிரியம்வதை. (பூங்கூடையைப்பார்த்து) சகி! பூசைக்கு வேண்டுமானபூக்கள் பறிக்கப்பட்டாயினவென்று நினைக்கிறேன்.

அனசூயை. சகுந்தலையின் காவற்றெய்வத்தைப்பூசிக்க வேண்டியதும் உனக்குத்தான்தெரியுமே.

பிரியம்வதை. உண்மைதான். (இருவருந்திரும்பவும் பூப்பறிக்கின்றனர்.)

(திரைக்குப்பின்னே.)

ஓ நான் இங்கிருக்கின்றேன்!

அனசூயை. (உற்றுக்கேட்டு) தோழி! விருந்தினர் யாரோ தமது வரவைத் தெரிவிப்பதுபோல் தோன்றுகிறது

பிரியம்வதை. சகுந்தலை குடிலில் இருக்கின்றாளே இருக்கின்றாளல்லவா?

அனசூயை. ஆனால், அவள் மன நிலையைப் பற்றி எண்ணினால் அவள் இன்று இங்கில்லை. அத்தனை பூக்கள் போதும். (இருவரும் புறப்படுகின்றனர்.)

ஆ! விருந்தினனை உபசரியாது அலட்சியஞ்செய்தோய்! தவச்செல்வத்தை யுடையயான் இங்குவந்திருப்பதும் அறியாமல்நின்மனம் எவன்வயப்பட்டு எவனையேசிந்தித்துக் கொண்டிருந்ததோ அவன், கள்ளுண்டுமயங்கினோன் முன் பேசியதை நினையாமைபோல நினைவூட்டப் பட்டாலும் நின்னைநினையாதொழிக.

பிரியம்வதை. ஐயையோ! முன்பேசியபடியே சம்பவித்துவிட்டதே! சகுந்தலைதன்மனம் இங்கில்லாமையால் பூசிக்கத்தகுந்த யாரோஒருவர்க்குப் பிழைசெய்துவிட்டனளே!

அனசூயை (முன்நிமிர்ந்துபார்த்து) மெய்யாகவே அவர் சாமானியமனிதனல்லர். மிகஇலேசிலே கோபித்துக்கொள்

ளும் துருவாச மகருஷியேயன்றோ! அவ்வாறு சபித்துவிட்டு யாவராலுந் தடுக்கவொண்ணாத வேகத்தோடு திரும்பிப் போகின்றார்.

பிரியம்வதை. கொளுத்துந்தன்மை நெருப்பைத்தவிர வேறெதற்குண்டு? நீபோய் அவர் அடியில்விழுந்து அவரைத் திரும்பிவரும்படிசெய், இதற்குள்ளாகவாவது அர்க்கியத்திற்குத் தண்ணீர் சித்தஞ் செய்கிறேன்.

அனசூயை. அப்படியே (போய்விடுகின்றாள்)

பிரியம்வதை. (ஓடியெடுத்து வைக்கையில் இடறிவிழுந்து) ஐயோ! துரிதமாய்ப் போனதனால் யான் தடுக்கிவிழ என் கையிலிருந்தபூங்கூடை நழுவிவிழுந்துவிட்டதே. (பூக்களை ஒன்று சேர்த்தெடுக்கின்றாள்.)

(அனசூயைவருகின்றாள்)

அனசூயை. அவர் இயற்கையிலே கோணலான சுபாவமுடையராதலால் யாருடையவேண்டுகோளுக்குத்தான் செவிகொடுப்பார்? ஆயினும்அவரைச் சிறிது சாந்தப்படுத்தியிருக்கின்றேன்.

பிரியம்வதை. அவர்மட்டில்இவ்வளவுசெய்ததேஅதிகம்! எப்படிச்செய்தாய் சொல்.

அனசூயை. நான்மிகவேண்டியும் அவர் திரும்பிவரப் பிரியமில்லாமைகண்டு இவ்வாறு விண்ணப்பஞ்செய்து கொண்டேன். "தெய்வத்தன்மையுள்ள ஆரியரே! தவத்தின்வல்லமை இன்னதென்றறியாத நம்புதல்விசெய்த இவ்வொரு பிழையைமுதன்முதற் செய்ததென்றுகருதி அதனைப்பொறுத்தருளல் வேண்டும்" என்பதே.

பிரியம்வதை. ஆம், அதன்பிறகுஎன்ன?

அனசூயை. அதன்பிறகு "என் சொல் பிழையாது; ஆயினும், நினைவுகூர்தற்கு அடையாளமான ஓர் ஆபரணத்

தைக் காண்டலும் அச்சாபம் நீங்கும்" என்று சொல்லிக் கொண்டே சடுதியில் மறைந்துபோயினார்.

பிரியம்வதை. அப்படியானால் நாம் சிறிது தைரியமாயிருக்க இடமுண்டு. நம்வேந்தர்பெருமான் புறப்படுங்காலத்து நினைவுகூர்தற்கு அடையாளமாகத் தன்பெயர்பொறிக்கப் பெற்றகணையாழியைச் சகுந்தலையின் விரலில் தாமே பொருத்திவிட்டுப்போனார்; அதனால் சகுந்தலை அச்சாபந்தீர்க்கு மருந்தைத் தன்னிடத்தே வைத்திருக்கின்றாள்.

அநசூயை. இதற்கிடையில் அவளுக்காகக் காவற்றெய்வத்தை வழிபடுதற்குப் போவோம், வா.

(இருவருஞ்சுற்றிப் போகின்றனர்)

பிரியம்வதை (பார்த்து) சகி அநசூயே! இதோபார்! தன் இடதுகையில் முகத்தை வைத்தவண்ணமாயிருக்கும் நம் அன்பிற்கினியதோழி படத்திலெழுதிய சித்திரம்போல் காணப்படுகின்றாள். தன் சிந்தையெல்லாம் தன்கணவன்மேலிருத்தலின் தன்னையேமறந்திருக்குமிவள், ஓர் அதிதியை மறக்கக்கேட்பானேன்?

அநசூயை. பிரியம்வதே! இங்கே நிகழ்ந்த இது நம் இருவர் வாய்மட்டிலிருக்கட்டும், நம் காதற்றோழி இயற்கையிலே மிகமெல்லியாளாதலின் இத்துக்கசம்பவம் அவளுக்குத் தெரியாமல் காப்பாற்றவேண்டும்.

பிரியம்வதை. யார்தாம் புதுமல்லிகைக்கு வெந்நீர் தெளிப்பார்? (இருவரும் போய்விடுகின்றனர்.)

இடையுரை முடிந்தது.

(உறக்கம்நீங்கி எழுந்தசீடன். ஒருவன் வருகின்றான்.)

சீடன். ஊரிலிருந்து திரும்பிவந்திருக்கும் மாட்சிமை தங்கிய காசியபர் நாழிகை இவ்வளவென்று பார்த்து வரும்

படி எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றனர். இப்போது நான் வெளியே சென்று இன்னும் பொழுதுவிடிய எத்தனை நேரஞ் செல்லுமென்று காண்பேன். (சுற்றிப்போய்ப் பார்க்கின்றன்.) ஒ! விடியற்காலமாயிற்றே! ஏனெனில்,

இலைகிளர் பூண்டுக்குத் தலைவனாகிய
சுடரொளி மதியங் குடபால் வரையின்
ஒருபுறஞ் செல்லாநிற்ப ஒருபுறம்
வைகறை யென்னுங் கைவல் பாகன்
முன்செல விடுத்துப் பொன்போன் ஞாயிறு
கிழக்குத்திசைவயின் எழுச்சிபெற்றன்றே,
ஒருகாலீரிடத் தீரொளிப்பிண்டந்
தோன்றலும் மறைதலும் ஆன்றறியுங்கால்
மன்னோர் வாழ்க்கையி லின்னலு மின்பமும்
மாறிமாறி வீறுதல் பெறுமே,
செழுமதி யென்னுங் கொழுநனை யிழந்து
முதிரெழில் போனஆம்பல் எதிர்விழிக்கு
இன்பம் பயவா இயல்புணர் விடத்துசங்கு
ஆருயிர்க் காதலற் பிரிந்த வாரிருங்
கூந்தன் மடவாள் எய்துஞ்
சாந்துயர் பொறுத்தற் கரிதெனப்படுமே.

(திரையைச் சடுதியில்விலக்கிக்கொண்டு
அனசூயை வருகின்றள்.)

**அனசூயை.** சிற்றின்பவிஷயத்தில் நமக்கு அனுபவமில்லாவிட்டாலும், சகுந்தலையிடத்து அரசன் துரோகமாய் நடந்துகொண்டானென்பதைப்பற்றி முன்னமே நமக்கு அச்சமுண்டாகவில்லையா?

**சீடன்.** காலையில் வேள்விசெய்ய வேண்டுங்காலம் வந்துவிட்டதென்று நான் இப்போது குருவினிடஞ் சென்று தெரிவிக்கின்றேன்.

• அனசூயை. உறக்கம் நீங்கி எழுந்தும் நான் என் செய்வேன்? நான் எப்போதுஞ் செய்யவேண்டிய கருமங்களைச் செய்தற்கும் என் கைகால்கள் முன்செல்லவில்லை. நன்றியறிவில்லாக் கயவனான ஒருவனுக்குப் பேதையான எங்கள் தோழி தன்னைக்கொடுத்து விடும்படிசெய்த மன்மதன் இப்போதாவது திருத்தி யடையட்டும். அல்லது துருவாசருடைய கோபம் தான் இத்தன்மையான துன்பத்தை விளைவித்து வருகின்றதோ, அப்படியில்லாவிட்டால் அந்த இராஜருஷியானவர் அத்தகைய உறுதிமொழிகள் புகன்று பின் இத்தனை நெடுங்காலமாக ஓர் இலிகிதமாயினும் எழுதாமல் இருப்பரா? ஆகையால் அறிவித்தற்கு அடையாளமான கணையாழியையே அவர்க்கு நாம் அனுப்பலாம்; ஆனால், அரியதவவொழுக்கத்திற்குரிய துறவோரில் யாரை இது செய்யும்படி வேண்டிக்கொள்ளலாம்? நம்முடைய சகியினிடத்திலேதான் குற்றமிருக்கின்றது, ஆனதனாலேதான் ஊரிலிருந்துவந்ததந்தை காசியபருக்குச் சகுந்தலை துஷியந்த அரசனைக் கந்தருவ மணஞ்செய்து கொண்டாளென்றும், இப்போது கருக்கொண்டிருக்கின்றாளென்றும் சொல்லுவதற்கு என்மனம் ஒருப்பட்டாலும் என் நாவானது எழவில்லை. இவ்வாறுபின், வேறு நாம்யாது செய்யலாம்?

(பிரியம்வதை வருகின்றாள்.)

பிரியம்வதை. (மகிழ்ச்சியோடு) சகி! சீக்கிரம் வா! சீக்கிரம்வா! சகுந்தலையைக் கணவனிடம் அனுப்புதற்கு மங்களகாரியங்கள் செய்யவேண்டும்.

அனசூயை. தோழி! இஃதெப்படி நிகழ்ந்தது?

பிரியம்வதை. கேள். நன்றாய் உறங்கினளா வென்று கேட்கச் சகுந்தலையினிடம் இப்போதுதான் சென்றேன்.

அனசூயை. அப்புறம் யாது?

பிரியம்வதை. இப்போதுதான் சகுந்தலை நாணத்தினாற் றலைகவிழ்ந்து கொண்டிருப்ப அவளை அப்பா காசியபர் தழுவிக்கொண்டு பின்வருமாறு வாழ்த்துரை கூறுவாராயினர். "வேள்விவேட்குமவன் கண்கள் புகையால் மறைக்கப்படினும் அவனிடும் பலியானது அதிட்டவசத்தால் நெருப்பில் விழுந்தது; என்னருமைக்குழந்தாய்! நல்லமாணாக்கனுக்குக் கற்றுக்கொடுத்த கல்விபோல நீயும் எனக்குக் கவலைதராதவளானாய், இன்றைக்கே துறவிகளைத் துணையாகக் கூட்டி நின்னை நின் கணவனிடம் அனுப்பிவிடுகின்றேன்."

அனசூயை. அப்பா காசியபருக்கு இச்செய்தியாரால் தெரிவிக்கப்பட்டது?

பிரியம்வதை. அவர் வேள்விச்சாலையிற் புகும்பொழுது செய்யுள் உருவாய் எழுந்த ஓர் அசரீரியால்.

அனசூயை (வியப்படைந்து) அதனைச்சொல்.

பிரியம்வதை. (பிராகிருதத்திலன்றித் திருந்தமானசமஸ்கிருதத்தில்)

"முன்னுக தவமுதிர் முனிவ! நின்மகள்
வன்னிமா மரந்தனுள் வன்னி வைத்தல்போல்
இந்நிலம் நலம்பெறத் துடியந்தன் னிட்ட
பொன்னுயிர் அகட்டினிற் பொலியக் கொண்டனள்."

அனசூயை. (பிரியம்வதையைத் தழுவிக்கொண்டு) சகி! நான் பாக்கியசாலியானேன்! ஆனால், இன்றைக்கே சகுந்தலை போகின்றாளென்பதை நினைக்கையில், அவ்வின்பத்தோடு கவலையுமுண்டாகின்றதே.

பிரியம்வதை. தோழி! நம்முடைய துயரத்தை எப்படியாவது நீக்கிக்கொள்வோம்; பேதையான அவள் எப்படியாவது இன்பமெய்தட்டும்.

அனசூயை. நல்லது, இதனை எண்ணித்தான் சிலநாளாயினும் வாடாமல் பச்சென்றிருக்கும் கேசரமாலையைத் தென்னோலையால் முடைந்து அதோ மாமரக்கிளையில் தொங்கவிட்டிருக்கும் கூடையில் வைத்திருக்கின்றேன். நீ அதனை எடுத்துவா; இதற்கிடையில் நானும் கோரோசனை, தீர்த்தமண், மெல்லறுகம்புல் முதலிய மங்களகரமான வாசனைக்கூட்டுச் சித்தம்பண்ணுகின்றேன்.

பிரியம்வதை. நல்லது, அப்படியேசெய்.

(அனசூயை போய்விடுகின்றாள், பிரியம்வதை பூங்கூடைஎடுத்து வருகின்றாள்.)

(திரைக்குப்பின்னே)

கௌதமீ! சார்ங்கரவன்முதலியோரைச் சகுந்தலையின் உடன்போகச்சொல்.

பிரியம்வதை. (உற்றுக்கேட்டு) அனசூயே துரிதஞ்செய், துரிதஞ்செய். அத்தினபுரத்திற்குச் செல்லவேண்டுந் துறவிகள் அதோ அழைக்கப்படுகின்றார்கள்.

(அனசூயைமங்கலகரமான வாசனைக்கூட்டடக் கையிலெடுத்துக் கொண்டு வருகின்றாள்.)

அனசூயை. சகி! வா நாம்போவோம் (இருவரும்போகின்றார்கள்.)

பிரியம்வதை. (பார்த்து) அதோபார் சகுந்தலைவிடியற்காலத்திலே தலைமுழுகி, ருஷிபத்தினிகள்கையில் காட்டுத்தானியஅக்கதைகளேந்தி ஆசீர்வதிப்ப அமர்ந்திருக்கிறாள்! நாமும்அவளிடம்போவோம். (முன் போகின்றனர்)

(மேற்சொல்லியபடி சகுந்தலை ஆசனத்திலிருந்த வண்ணமாய்த் தோன்றுகின்றாள்.)

இருஷி பத்தினிகளுள் ஒருவர். (சகுந்தலையை நோக்கி) குழந்தாய்! நீ நின்கணவனால் நன்குமதிக்கப்பட்டுப் 'பட்டமகிஷி' என்னுஞ் சிறப்புப்பெறுவாயாக.

மற்றொருவர். குழந்தாய்! நீ வீரத்தாய்சிறந்தமைந்தனைப்பெறுவாயாக.

மூன்றமொருவர். குழந்தாய்! நின்கணவனிடத்து மிக்க நன்குமதிப்பை அடைவையாக.

(இங்ஙனம் ஆசிகூறிக் கௌதமியைத் தவிரத் துறவோர் மனைவிமார் எல்லாரும் போய்விடுகின்றனர்.)

தோழிகள். (அருகேவந்து) சகி! நீ நல்லமங்களமுழுக்கு முழுகினையென்று நினைக்கின்றோம்

சகுந்தலை. என்தோழிமார்க்கு நல்வரவாகுக! இங்கே இருங்கள்.

இருவரும். (மங்களதிரவியம் வைத்த கலத்தை எடுத்துக்கொண்டு இருந்து) அன்புள்ள சகுந்தலே! செவ்வையாயிரு, இம்மங்களமான வாசனைக்கூட்டை நாங்கள் பூசுகிறோம்.

சகுந்தலை. இஃது என்னாற்பெறிதும் பாராட்டற்பாலதாம். என்றோழிமார் கைகளாற்செய்யப்படும் இவ்வலங்காரம் இனி எனக்குக்கிட்டுதல் அரிது. (கண்ணீரை உதிர்க்கின்றாள்.)

இருவரும். சகி! மங்களகரமானசமயத்தில் நீ அழுவது தகாது. (கண்ணீரைத்துடைத்து அவளை அலங்கரிக்கின்றனர்.)

பிரியம்வதை. ஆபரணங்களால் அலங்கரிக்கத்தகுந்த உன் அழகிய வடிவத்திற்கு ஆசிரமத்தில் உள்ளவற்றால் அலங்கரித்தால் அஃது அவ்வழகைக்குறைக்கின்றது.

(கையில்வரிசையோடு இருஷிகுமாரரிருவர் வருகின்றனர்.)

இருஷிகுமாரர். இதோ ஆபரணங்களிருக்கின்றன; இவற்றைக்கனந்தங்கிய அம்மையார் தரித்துக்கொள்ளட்டும்.

(அவற்றைப்பார்த்ததும் எல்லாரும் வியப்படைகின்றனர்.)

கௌதமி. குழந்தாய்நாரதா! இவை எங்கிருந்து கிடைத்தன?

ஒருவர். தந்தைகாசிபருடைய வல்லமையால்தான்.

கௌதமி. இவற்றைத் தம்மனத்தாற் சிருட்டித்தனரோ?

மற்றவர். இல்லை, இல்லை, கேளுங்கள்; மகிமைபொருந்திய முனிவர் எங்களை நோக்கிச் "சகுந்தலைக்காக மரங்களினின்று மலர் பறித்து வாருங்கள்." என்று கட்டளை யிட்டார். அப்போது அங்கே! மங்கள காரியத்திற்குத் தகுந்தனவாய் வெண்மதிபோன்ற பட்டாடைகளைச் சிலமரங்கள் கான்றன; வேறு சில மரங்கள் அடிகளுக்கு ஊட்டுஞ் செம்பஞ்சிக் குழம்பை ஒழுகவிட்டன; மற்றுஞ் சிலவற்றிலிருந்து காட்டணங்குகள் அம்மரங்களில் துளிர்த்த இளந்தளிர் போன்ற கைகளை மணிக்கட்டு வரையில் நீட்டி இம்மணிக் கலங்களை நல்கின.

பிரியம்வதை. (சகுந்தலையைப் பார்த்து) இத்தகைய அனுக்கிரகத்தால் நின் கணவன் மாளிகையில் நீ அரச போகத்தை நுகரப்போகின்றாய் என்பது முன்தெரிவிக்கப் படுகின்றது.

(சகுந்தலை நாணம் எய்துகின்றாள்.)

இருஷி குமாரர் ஒருவர். ஏ கௌதமா! வா, வா; மரங்கள் செய்த இவ்வுதவியை நீராடப் போயிருக்கும் காசியபருக்குத் தெரிவிப்போம்.

மற்றொருவர். அப்படியே. (இருவரும் போய் விடுகின்றனர்.)

அனசூயை. நாங்கள் ஆபரணங்கள் அணிந்த வழக்கமில்லை; ஆயினும், நாங்கள் சித்திரத்தில் எழுதப்பழகியபடி உனக்கு இவற்றை அணிந்திடுகின்றோம்.

சகுந்தலை. உங்கள் திறமை எனக்குத் தெரியும். (இருவரும் அவளை அலங்கரிக்கின்றனர்.)

(நீராடித் திரும்பிய காசியபர் வருகின்றார்.)

காசியபர்.

இன்று சகுந்தலை போகின்றாளென்றெண்ணுதொறுங்
கன்றுவ தொன்றுங் கவலையினாலென் காழ்யனனே

यास्यत्यद्य शाकुन्तलेति हृदयं

துன்றியகண்ணீர் சோராதம்மத் தொடர்புற்று
நின்றென் மிடறோ கம்முவ தென்னென்னிலேதானே.

காட்டில் துறவற வாழ்க்கை நடாத்தும் எனக்கே அன்பி ஞல் இத்தகைய மனத்துயரம் நிகழுமாயின், இல்லற வாழ்க்கை யுடையார் தம் புதல்விமாரை முதன் முதற் பிரியுமிடத்து எத்தன்மைத்தான துன்பத்தை எய்துவாராகல் வேண்டும்! (சுற்றி வருகின்றார்.)

தோழிமார். அன்புள்ள சகுந்தலே! உனக்கு அலங் காரம் பண்ணியாயிற்று; இப்போது இப்பட்டாடைகள் இரண்டனையும் உடுத்துக்கொள்.

(சகுந்தலை எழுந்து அவ்வாடைகளை உடுக்கின்றாள்.)

கௌதமி. குழந்தாய்! நின்றந்தை பேரானந்தம் பெருகுங் கண்களால் நின்னைத் தழுவினாற்போற் பார்த்துக் கொண்டு இதோ வருகின்றார்; அவரைப் பணிவாயாக.

சகுந்தலை. (நாணத்தோடும்) அப்பா வணங்குகின் றேன்.

காசியபர். குழந்தாய்! யயாதிவேந்தனாற் சர்மிஷ்டை எங்ஙனம் நன்குமதிக்கப்பட்டனளோ அங்ஙனமே நீயும் நின் கணவனால் மிகவும் நன்குமதிக்கப் படுவாயாக; அவள் பூருவனைப் பெற்றெடுத்தவாறுபோல நீயும்இவ்வுலகெல்லாம் செங்கோலோச்சும் மைந்தனைப் பெறக்கடவாய்.

கௌதமி. சுவாமி, இது வரமே யல்லது ஆசீர்வாத மன்றே.

காசியபர். குழந்தாய்! இப்போதுதான் ஓமஞ் செய்யப்பட்ட இவ்வேள்வித் தீயைச் சுற்றிவா.

(எல்லாருஞ் சுற்றிவருகின்றனர்.)

காசியபர். (இருக்கு வேதசந்தசில் ஒரு செய்யுளைக் கூறி அவளை ஆசீர்வதிக்கின்றார்.) பரிசுத்த சமித்துக்கள் இடப் பட்டுத் தருப்பைப் புல் பரப்பிப் பலிபீடத்தைச்சுற்றிலும் உள்ள குழிகளில் வளர்க்கப்பட்டு ஓமதிரவிய மணத்தாற் பாவத்தைப் போக்கும் இவ்வேள்வித் தீக்கள் நின்னைப் பரி சுத்தஞ் செய்வனவாக! இப்போது புறப்படுக. (சுற்றிப் பார்த்து) சார்ங்கரவனும் மற்றையோரும் எங்கே?

(ஒரு சீடன் வருகின்றான்.)

சீடன். சுவாமி, நாங்கள் இதோ இருக்கின்றோம்!

காசியபர். சார்ங்கரவா! நின் தங்கைக்கு வழிகாட் டிச்செல்.

சார்ங்கரவன். அம்மா, இவ்வழியே இவ்வழியேவா.

(எல்லாருஞ் சுற்றி நடக்கின்றார்கள்.)

காசியபர். வன அணங்குகள் உறைவிடமான துறவா சிரமமரங்காள்! முதலில் நுங்கட்குத் தண்ணீர்விடாவிட்டால் தானும் நீர் அருந்தவிரும்பா திருந்தவளும், அலங்கரித்துக் கொள்வதில் அவாவிருந்தபோதிலும் நுங்களிடத்துள்ள அன்பினால் நுங்கள் இளந் தளிரைக் கிள்ளா திருந்தவளும் நீங்கள் முதன் முதற் பூக்கின்றபோது விழாக்கொண்டாடி னவளுமான சகுந்தலை தன் கணவன் மனைக்குச் செல்கின் றாள்; நீங்க ளெல்லீரும் அவளுக்குப் போய்வருகவென விடைகொடுமின்கள். (குயில்கூவும் இசைகேட்டு) குயிலின் இன்னிசை கூவக் கேட்டமையால் சகுந்தலையின் காட்டு வாழ்க்கைக்குத் துணையா யிருந்த மரங்கள்விடைகொடுத்து விட்டன.

पातुं न प्रथमं व्यवस्यति जलं युष्मास्वपी

(ஆகாயத்தில்)

வழியி லிடையிடையேகொழுந்தாமரைபொதுளிவளஞ்சால்
தடங்கள் வயங்கிடுக,
அழிவெங் கதிர்வருத்தம் அடர்ந்த நிழன்மரங்கள் அகற்றி
மகிழ்ச்சி அளித்திடுக,
கழிய மலர்த்துகள்போற் கழுமு புழுதியடி கலங்கா
தினிதாய்க் கலந்திடுக,
செழிய மலயவளி திகழ வுலவிடுக திருவே
யனையாள் செலுநெறியே.

(எல்லாநும்வியப்போடுகேட்கின்றனர்)

கௌதமி. துறவாசிரமத்திலிருக்குந் தெய்வங்கள்உறவினரைப்போல் அன்புடையனவாய் நீ போவதற்குவிடை தருகின்றன. நீ அத்தெய்வங்களை வணங்கிடுக.

சகுந்தலை. (அங்ஙனமேவணங்கிநடந்துமறைவாய்) அன்புள்ள பிரியம்வதே! என்கணவனைக்காணுதற்கு மிகுந்த ஆவலிருந்தாலும், இத்துறவாசிரமத்தை விட்டுப் பிரிய வேண்டியிருத்தலால் என் அடிகள் மிகவும் பிரயாசையோடு முன் செல்லுகின்றன.

பிரியம்வதை. இந்தத் துறவா சிரமத்தை விட்டுப்பிரிதற்கு நீ மாத்திரம் வருத்தப்படவில்லை; உன்னைப் பிரிய வேண்டுங் காலம் வந்ததுபற்றி இத்துறவாசிரமமும் அடையும் நிலைமையைப்பார். மான்கள் தம்வாய்நிறையக் கௌவிய தருப்பைப்புல்லை வாயிலிருந்து நழுவ விடுகின்றன; மயில்கள் ஆடுதல் ஒழிகின்றன; பழுத்த இலைகளை உதிர்க்கின்ற செடிகள் கண்ணீர் சிந்தி அழுதலைப் போலிருக்கின்றன.

சகுந்தலை. (நினைவுற்று) அப்பா, நான் என் சகோதரியைப்போற் பாவித்த வனசோதினி என்னும் மல்லிகைக் கொடியினிடத்து முதலில் விடைபெற்று வருகின்றேன்

காசியபர். நீ அதனிடத்துச் சகோதர வுரிமைபாராட்டி வருதலை நான் அறிவேன். இதோ அது தென்புறத்தேயிருக்கின்றது.

சகுந்தலை. (அக்கொடியின் கிட்டப்போய்) வனசோதினீ! நீ தேமாமரத்தைத் தழுவிக்கொண்டிருப்பினும், இப்பக்கமாய்ப் பரவியிருக்கும் நின்கிளைகளாகிய கைகளால் என்னைத் தழுவிக்கொள்; இன்றுமுதல் நான் உன்னைவிட்டுப் பிரிந்து நெடுந்தூரத்தி லிருக்கவேண்டியதாயிற்று.

காசியபர். உன் புண்ணியவசத்தால், உனக்கென்றே முன்பு நான் குறித்துவைத்த உனக்கு இசைந்தநாயகனோடு நீகூட்டப்பட்டாய்; இந்தப்புதுமல்லிகைக் கொடியுந்தானே இத்தேமாவைச்சேர்ந்தது; ஆதலால், இதனையும்நின்னையும் பற்றியிருந்த என்கவலை ஒழிந்தது. இங்கிருந்து இனி நின் வழியிற் சேர்.

சகுந்தலை. (தன்தோழிமாரைநோக்கி) தோழிகாள்! இந்நவ மல்லிகையை உங்களிருவர் கையிலும் ஒப்புவிக்கின்றேன்.

தோழிமார். எங்களை யார்கையில் ஒப்புவிக்கின்றாய்? (கண்ணீர் சிந்துகின்றனர்.)

காசியபர். அனசூயே, அழாதே, நீயன்றோ சகுந்தலைக்குத் தேறுதல் சொல்லவேண்டும். (எல்லாரும்போகின்றனர்.)

சகுந்தலை. அப்பா, கருக்கொண்டிருத்தலால் மெதுவாக அக்குடிலுக்குப் பக்கத்தே மேய்ந்துகொண்டிருக்கும் பெட்டைமான் சுகமாய்க் கன்று ஈன்றவுடனே என்னிடத்தில்

யாரையாயினும் வரச்சொல்லி அந்தச்செய்தியைத் தெரிவியுங்கள்.

காசியபர். நல்லது நாம் அதனை மறவோம்.

சகுந்தலை. (ஓடி தடுக்கப்பட்டுநின்று) திரும்பத் திரும்ப என் ஆடையை யாது இழுக்கின்றதென யான் வியப்படைகின்றேன். (திரும்புகின்றாள்.)

காசியபர். குழந்தாய்! இதோ, நீ நின்கைநிரம்பச் சியாமாக தானியத்தைஊட்டி நின் மகனைப்போல் வளர்த்துவந்ததும், தருப்பைப்புல்லின் முனைகுத்திப் புண்ணானவாயில் இங்குதி நெய்யைத்தடவி அதனை ஆற்றிவந்ததுமான இவ்விளமான் உன்னை வழிவிடாமற் பின்பற்றுகின்றது.

சகுந்தலை. குழந்தாய்! உன்னைவிட்டுப்போகின்ற என்னை ஏன் பின்றொடர்கின்றாய்? நின்னை யீன்றபின் நின்தாய் இறந்தாலும் நீ செவ்வையாக வளர்க்கப்பட்டுவந்தாய், இப்போது நானில்லாவிட்டாலும் அப்பா உன்னைப் பாதுகாப்பர்; ஆகையால் திரும்பிப்போ. (அழுதுகொண்டு நடக்கின்றாள்.)

காசியபர். நீ கண்ணீர்விடுதலால் நீண்ட இறையினையுடைய நின்கண்கள் பார்வை மங்குகின்றன; ஆகையால் மனத்தைத் தேற்றிக் கண்ணீரொழுகாதபடிசெய், ஏனெனில், இவ்வழியில் மேடுபள்ளங்கண்டு வையாமையால் நின் அடிகள் தவறுகின்றன.

சார்ங்கரவன். தமக்கு இனியாரைப் பயணப்படுத்தி வழிவிடுக்கின்றவர்கள் தண்ணீர்க்கரைவரையில்தான் வரல் வேண்டுமென விதிக்கப்பட்டிருக்கின்றது. இதோ இங்கு ஏரிக்கரை வந்துவிட்டது. இனிச்சொல்லவேண்டிய செய்தியைச் சொல்லிவிட்டுத் திரும்புங்கள்.

காசியபர். அப்படியாயின், இவ்வாலமர நீழலிற் றங்குவோம்.

(எல்லாருஞ்சென்று இருக்கின்றார்கள்.)

காசியபர். (தனக்குள்.) மாட்சிமை தங்கிய துஷியந்த வேந்தனுக்குத் தகுதியாக யாதுசெய்தி சொல்லி விடுத்திடலாம்? (சிந்திக்கின்றார்.)

சகுந்தலை (மறைவாய்) சகி பார்!

தாமரை யிலைப்பினே தங்கு சேவலைக்
காமரு மகன்றிலுன் காணலாமையாற்
பூமரு வாயினூற் புலம்பிக் கூவிட
வேமென துளமிது விழிகள் காணவே.

அனசூயை. என் அன்பே அங்ஙனஞ்சொல்லாதே. இவ்வன்றிற்பெடையும் தன்றுணையைப் பிரிந்ததுயரத்தால் மிக நெடிதாகத் தோன்றும் இரவையுங் கழித்துக்கொண்டுதானிருக்கின்றது; பிரிவால் நேர்ந்ததுன்பம் பொறுத்தற் கரிதாயினும் திரும்பவுந் தன்றுணையைச் சேரலாமென்னும் ஆவலாற் பொறுக்கக்கூடியதாகவே யிருக்கின்றது.

காசியபர். சார்ங்கரவா! சகுந்தலையை அரசனெதிரிற் கொண்டுபோய்விட்டு நான்சொன்னதாக இதனைச்சொல்லுதல் வேண்டும்.

சார்ங்கரவன். அங்ஙனமே, தாங்கள் கட்டளையிடுங்கள்.

காசியபர். நாங்கள் பொறிகளை யடக்குந் தவச்செல்வமுடையோ மென்பதையும், உமதுகுடி மிகமேம்பாடுள்ள தென்பதையும், உறவினர் வாயிலாகவன்றிச் சகுந்தலை உம்மிடத்து மிக்கஅன்பு பூண்டொழுகினா ளென்பதையும் நீர் இனிது நினைவுகூர்ந்து நும்மனைவிமாருள் இவளைச் சமமதிப் போடுவைத்து நடத்திவரல்வேண்டும். இதற்குமேல் நடக்க

வேண்டுவன அவள் அதிட்டவசம்போலாகட்டும்; இதற்கு மேற் பெண்ணைச் சேர்ந்தவர்கள் சொல்லுதலாகாது.

சார்ங்கரவன். செய்தி இன்னதென்று தெரிந்துகொண்டோம்.

காசியபர். என்மகளே! உனக்கு இப்போது சிறிது அறிவு புகட்டவேண்டியிருக்கின்றது; நாங்கள் வனவாழ்க்கையுடையோமாயினும் உலகவியல்பு அறிவோம்.

சார்ங்கரவன். அறிவுடையோர்க்குத் தெரியாதனவில்லை.

காசியபர். இங்கிருந்து நீ நின்கணவன் வீட்டுக்குச்சென்றபின் நின்மூத்தோர்க்குக் கீழ்ப்படிந்தொழுகு; நின் கணவன் நின்னோடு வெகுண்டகாலத்து நீயும் அவனோடு வெகுண்டுரையாடாதே; நின் ஏவலாளரை மிகவும் அன்பாய் நடத்து; நின் செல்வவளங்களைக்கண்டு செருக்கடையாதே, இவ்வாறு ஒழுகுகின்றவர்களே 'இல்லக்கிழத்தி' எனுஞ் சிறப்புப்பெயர் பெறுவர், இதற்குமாறாய் நடப்பவர்கள் 'குடிக்கொடியாள்' எனப்படுவர். கௌதமி எப்படி நினைக்கின்றனளோ?

கௌதமி. மணமகளுக்குச் சொல்லவேண்டுவன இவ்வளவே; குழந்தாய் இவற்றையெல்லாம் நன்கு நினைவுறுத்து.

காசியபர். குழந்தாய், என்னையும் நின்தோழிமாரையுந் தழுவிக்கொள்.

சகுந்தலை. அப்பா, என்சகிமார் பிரியம்வதை அனசூயை இருவரும் இங்கிருந்து திரும்பிவிட வேண்டுமோ?

காசியபர். அவர்களும் மணஞ்செய்து கொடுக்கப்படல் வேண்டும். ஆகையால், அவர்கள் உன்னுடன் அங்குவருதல் தகுதியன்று. கௌதமி உன்னுடன் வருவள்.

சகுந்தலை. (தந்தையைத் தழுவிக்கொண்டு) மலையமா மலைப் பக்கத்தினின்றும் பிடுங்கப்பட்ட சந்தனச்செடியைப் போல் இப்போது என் அப்பா மடியை விட்டுப் பிரிந்து போய் வேறிடத்தில் நான் எங்ஙனம் உயிர் வாழ்வேன்?

காசியபர். குழந்தாய்! நீ ஏன் இங்ஙனம் அச்சப்படு கின்றாய்? உயர்குடிப் பிறந்த மணவாளனுக்கு மனையாட்டி யாய் விரும்பத்தக்க நிலைமையை யடைந்து, ஒவ்வொரு நிமிஷ மும் அவனுடைய அரிய பெரிய அரச கருமங்களில் நின் நினைவு இழுப்புண்டு, கீழ்த்திசை இளஞாயிற்றைத்தோற்று விக்குமாறுபோல நீயும் பரிசுத்தனான மகனைப்பெற்று இன் புறுங்கால் நீ என்னைப் பிரிந்ததனால் உண்டான துயரத்தை நினைக்கவேமாட்டாய்.

(சகுந்தலை தந்தையின் அடிகளில் விழுந்து பணிகின்றாள்.)

காசியபர். நீ யடையவேண்டுமென யான்விரும்புவன வெல்லாம் எய்தக் கடவாய்!

சகுந்தலை. (தன் தோழிமார் கிட்டப்போய்) தோழிகாள், இருவிரும் என்னை ஒன்றாய்த் தழுவிக் கொள்ளுங்கள்.

தோழிகள். (அவ்வாறேசெய்து) சகி, ஒருகால் அரசன் உன்னைத் தெரிந்துகொள்ளத் தாமதமானால், அவர் பெயர் செதுக்கப்பட்ட இக்கணையாழியை அவருக்குக் காட்டு. (கணையாழியைக் கொடுக்கின்றனர்.)

சகுந்தலை. இங்ஙனம் நீங்கள் ஐயுறுவதைக் கண்டு எனக்கு நடுக்கமுண்டாகின்றது.

தோழிமார். அஞ்சாதே! அன்பின் மிகுதியினால் ஏதே னுந் தீங்குண்டாகுமோ என அஞ்சுதல் வழக்கம்.

சார்ங்கரவன். சூரியன் ஆகாயத்தின் மேற்பாகத்தில் எழும்பி விட்டான். அம்மையார் அவர்கள் துரிதப்படல் வேண்டும்.

சகுந்தலை. (துறவாசிரமத்தைப் பார்த்த வண்ணமாய் நின்றுகொண்டு) அப்பா, இத்துறவாசிரமத்தை யான் மறுபடியும் எப்போது வந்து காண்பேன்?

காசியபர். குழந்தாய் கேள்! நான்கு திக்கும் விரிந்த நிலமகளுடன் நீயும்மனைவியாய் நெடுநாள் வாழ்ந்து, நிகரற்ற வீரனான ஒரு மைந்தனையும் துஷியந்தனுக்குப் பெற்றுக் கொடுத்து, அவன் அப்புதல்வன்மேல் இராச்சிய பாரத்தை இறக்கிவைத்த பின்பு நீ நின் கணவனோடும் மறுபடியும் இத்துறவாசிரமத்திற்கு வருவாய்.

கௌதமி. குழந்தாய், புறப்படவேண்டியவேளை தப்பிப் போகின்றது. உன் அப்பாவைத் திரும்பிப்போகவிடு. இப்படியே இவள் பொழுதெல்லாம் திரும்பத் திரும்பப் பேசிக்கொண்டேயிருப்பாள்; ஆகையால், தாங்கள் தாம் திரும்பிப் போகத் தயவு செய்யவேண்டும்.

காசியபர். குழந்தாய், என் தவ அனுட்டானத்திற்குத் தடை உண்டாகின்றது.

சகுந்தலை. (மறுபடியும் தந்தையைத் தழுவிக்கொண்டு). தவ அனுட்டானத்தால் அப்பாவுடைய உடம்பு இளைத்துப் போயிருக்கின்றது; ஆகையால் என் பொருட்டு மிகுந்த கவலை யடையாதேயுங்கள்.

காசியபர். (பெருமூச்செறிந்து) என் குழந்தாய்! நீ முன்னே பலியாக வாரி இறைத்த நீவார தானியங்கள் இப்போது குடில்வாயிலிலே முளைத்திருப்பதைப் பார்க்கையில் என் மனத்துயரம் எவ்வாறு குறைவுபடும்? வழி நெடுக உனக்கு மங்களமுண்டாகட்டும் போய்வா. (சகுந்தலையும் துணைவரும்போகின்றனர்.)

தோழியர். (சகுந்தலையை நெடுகப்பார்த்து) ஐயையோ! சகுந்தலை காட்டுத்தோப்பில் மறைந்துபோய் விட்டாளே!

காசியபர். (பெருமூச்செறிந்து) அனசூயே, உங்கள் தோழிபோய்விட்டாள். உங்கள் மனத்துயரத்தை ஆற்றிக் கொண்டு என் பின் வாருங்கள்; யான் ஆசிரமத்திற்குத் திரும்பிப்போகின்றேன்:

இருவரும். அப்பா, சகுந்தலையைப் பிரிந்து வெறிதா யிருக்கும் துறவாசிரமத்தினுள் எங்ஙனம் புகுவோம்?

காசியபர். அன்பின் மிகுதியினால் இப்படித் தான் தோன்றும். (சிந்தனையோடு நடந்துகொண்டு) சகுந்தலையைக் கணவன் வீட்டுக்குச் செலுத்தி விட்டமையால் எனக்கு இப்போது ஆறுதல் உண்டாய் மகிழ்ச்சி யடைகின்றேன்! ஏனெனில், உண்மையாகப் பேசுமிடத்துப் பெண்கள் பிறர்க்குரிய பொருளே யாகின்றனர்; இன்றைக்கு அவளைக் கணவன் வீட்டுக்குப் போக்கினமையால் தன்னிடத்து வைக்கப் பட்ட அடைக்கலப் பொருளைத் திரும்பவும் உடையானுக்குச் சேர்த்துவிட்டாற் போல என்மனம் ஆறுதல் அடைகின்றது. (எல்லாரும் போய்விடுகின்றனர்.)

நான்காம் வகுப்பு முற்றியது.

---

## ஐந்தாம் வகுப்பு.

களம்: அரண்மனை.

(விதூஷகனும் இருக்கையில் இருந்த வண்ணமாய் அரசனும் வருகின்றனர்.)

விதூஷகன். (உற்றுக்கேட்டு) ஓ நண்பரே! இசைக் கழகத்துள் நடப்பதைச் செவிகொடுத்துக் கேளும். தெளிவாகத் தெரியா விட்டாலும் மிக இனிமையாயும் பொருத்தமாயும் உள்ள சுரங்களோடு கூடிய இசை எனக்குக் கேட்கின்றது. நங்கை அமிசபதிகை வர்ணங்கள் பாடப் பழகுவதாக நினைக்கின்றேன்.

துஷியந்தன். பேசாதிரு. நான் சிறிதுகேட்கின்றேன்.

(அந்தரத்தில் பாட்டுக் கேட்கின்றது.)

விழுநறவு வேண்டிவிரி மாவிணரிற் பருகிச்
செழுமுளரி யிடைவறிது சேருமிள வண்டே!
செழுமுளரி யிடையிருந்து திகழ்மாவை நீயோர்
பொழுதுமறந் துறைகுவதுபொருந்துமோஉரையாய்?

துஷியந்தன். இன்னிசையோடு கலந்து ஒழுகும் இப்பாட்டு ஆ எவ்வளவு சுவையா யிருக்கின்றது!

விதூஷகன். இப்பாட்டின் சொற்பொருளை நீர் அறிந்துகொண்டீரா?

துஷியந்தன். (புன்முறுவல்செய்து). இவள் ஒருகால் என்னால் நேசிக்கப்பட்டாள்; ஆகையால், அரசி வசுமதியைக் குறிப்பிட்டு எனக்கு இப்பழிப்புரை இவளிடமிருந்து வந்ததென்று அறிகின்றேன். நண்ப மாதவிய! அமிசபதிகையினிடத்துச் சென்று என்னை அவள் சாதுரியமாய்ப் பழித்துவிட்டன ளென்று நான் சொன்னதாகச் சொல்,

விதூஷகன். உமதுகட்டளைப்படியே. (எழுந்து) ஓ நண்பனே! அரம்பைமாதரால் பற்றப்பட்ட முனிவரைப்போல, இவள் பிறர்கையைக்கொண்டே என்குடுமியைப் பிடித்துக்கொண்டமையால், எனக்கு அதனினின்றும் விடுதலை இல்லை

துஷியந்தன். நாகரிகமுள்ளவனைப்போலப்போய் இதனை அவளுக்குத் தெரிவி.

விதூஷகன். வேறுவழி ஏது! (போய்விடுகின்றான்)

துஷியந்தன். (தனக்குள்) இத்தன்மையான பொருளைத் தரும் இப்பாட்டைக்கேட்டவுடன், காதலரைப் பிரியாதிருக்கையிலும் எனக்குஏன் இத்தகையபெருங்கவலை உண்டாயிற்று? ஒருகால் இப்படியிருக்கலாம். அழகிய பொருள்களைப் பார்க்கும்போதும் இனியஓசைகளைக் கேட்கும்போதும் பாக்கியசாலியாயிருப்பவனும், தன்னையறியாமலே தன்மற்றை உணர்வுகளோடொன்றாய் நிலைபெற்று முற்பிறவியி லுண்டாய்க்கிடந்த காதல்உணர்வு அச்சமயத்தில் தோன்றப்பெறுகின்றானாகலின் அங்ஙனம்துயரம் அடைகின்றான். (மனவருத்தத்தோடு நிற்கின்றான்)

(பிறகு கஞ்சுகிஎன்னும் ஏவலாளன் வருகின்றான்)

கஞ்சுகி. ஆ நான் இந்தநிலைமைக்கு வந்துவிட்டதுவியப்பாயிருக்கின்றது! அரசனுடைய அந்தப்புரத்திற் காவற்றொழிலுக்கு அடையாளமாக நான்தாங்கிவந்த இந்தக்கோலே இத்தனைகாலங்கழிந்தபின்பு நடக்கத்தள்ளாத எனக்கு ஊன்றுகோலாய் வந்துவாய்த்தது. அரசன், செய்யவேண்டும் அறத்தின்கடமைகளைத் தள்ளமாட்டாரென்பது உண்மையே; ஆயினும், அவர் இப்போதுதான் அறங்கூறும் இருக்கையைவிட்டு எழுந்தனராகலின், கண்ணுவமுனிவர் சீடர்கள் வந்ததைஅறிவித்து இன்னும்அவரை நிறுத்திவைப்பதற்குமனமில்லாதவனா யிருக்கின்றேன். ஆயினும்என்,

குடிகளை ஆளுந்தொழிலுக்கு ஒழிவுகிடையாது. ஏனென்றால், சூரியன் ஒருதரம்தேரிற்பூட்டிய குதிரைகளோடுஞ் சென்றுகொண்டேயிருக்கின்றான்; காற்று இரவும்பகலும் இயங்கிக் கொண்டே யிருக்கின்றது; சேடனெப்போதும் நிலப்பொறையைச் சுமந்துகொண்டே யிருக்கின்றான்; ஆறிலொருகூறுபெறும் அரசன்கடமையும் அப்படியேயிருக்கின்றது. ஆகையால், நான் எனதுகடமையைச்செய்வேன். (நடந்துபோய்ப்பார்த்து) தன்மக்களைப்போலக் குடிகளுடைய காரியங்களையெல்லாம் பார்த்துவிட்டு, நண்பகல்வெப்பந்தாங்கிய அரசியானையானது மற்றையவற்றைப் புல்மேயவிடுத்துத் தான்தனியே ஒருகுளிர்ந்தநீழலில் இளைப்பாறுதல்போல அரசன் இளைபுற்றமனத்தோடு தனியே ஓரிடத்தில் இளைப்பாறிக்கொண் டிருக்கின்றார். (கிட்டப்போய்)வேந்தற்குவெற்றிசிறக்க! இமயமலைச்சாரலிலுள்ள அறவாசிரமத்தில்வசிக்கும் இருடிகள் மாதர்இருவரோடும் காசியபமுனிவரிடமிருந்து செய்திகொண்டுவந் திங்கு இருக்கின்றார்கள். இதன்மேல் தங்கள்கட்டளை.

துஷியந்தன். (மரியாதையாய்) காசியப ரிடமிருந்துசெய்திகொண்டுவந்தவர்களா?

கஞ்சுகி. வேறென்ன?

துஷியந்தன் சுருதிபிற் சொல்லப்பட்டவண்ணம் அறவாசிரமத்தில் வசிப்போரை வரவேற்பதற்குரிய உபசாரங்கள்செய்து அவர்களைஉள்ளே அழைத்துவரும்படி புரோகிதர் சோமராதருக்கு நான்சொன்னதாகத்தெரிவி. நானும்துறவிகளைவரவேற்பதற்குத் தகுதியான இடத்திற்போய் எதிர்பார்த்துக்கொண் டிருக்கின்றேன்,

கஞ்சுகி. தாங்கள் கட்டளையிடும்வண்ணமே. (போய்விடுகின்றான்)

துஷியந்தன். (எழுந்து) ஏடீ வேத்திரவதி! வேள்விச்சாலைக்குப்போகும் வழிகாட்டிச்செல்.

பிரதீகாரி. இவ்வழியேவாருங்கள், இவ்வழியேவாருங்கள், (வழிகாட்டிச் செல்கின்றாள்)

துஷியந்தன். (அரசாளுதலில் உண்டாகுந் துன்பத்தைச் சொல்லிக்கொண்டே நடந்து) தன்னால் வேண்டப்பட்ட பொருளைப் பெற்றுக்கொண்டவுடன் ஒவ்வொரு பிராணியும் இன்புறுகின்றது; அரசனோ தான்வேண்டிய பொருளைப் பெற்றும் பின்னும் துன்பத்தையே எய்துகின்றான். ஏனென்றால், விழைந்தது பெற்றவுடன் அவாமாத்திரம் அடங்குகின்றது; பெற்றதைக் காப்பாற்றுதற்கு உண்டாம் முயற்சியோ துன்பத்தையே தருகின்றது. கையிற் பிடித்த குடையை ஒப்ப அரசாட்சியானது ஆயாசத்தை வருவிப்பதுபோல அதனை நீக்குதற்கு இடந்தருவதில்லை.

(திரைக்குப்பின்னே)

வைதாளிகர். வேந்தற்கு வெற்றி சிறக்க!

முதல்வைதாளிகன்.

வெங்கதிரின் வெப்பம் விரிதலையிற் றாங்கித்
தங்குவோர்க் குக்கீழ் தண்ணிழல்செய் மரம்போல்
இங்குநின் னின்பங் குறியாது குடிகட்குப்
பொங்குதுயர் கொளுநின் பொலிவாழ்க்கை யிதுவே.

இரண்டாம் வைதாளிகன்.

ஒறுக்கும்வலி யுடைமையா லுண்மைநெறி திறம்புநரை
மறுக்கின்றாய் புரக்கின்றாய் மாறுபடு வோர்வழக்கை
அறுக்கின்றா யருஞ்செல்வ முறுவழிச்சேர் கேள்போலா
தறக்கிழமை குடிகண்மே லருள்கின்றா யண்ணலே.

துஷியந்தன். மனம் வருந்தி யிருக்கும் எனக்குத் திரும்பவும் இஃது ஆறுதல் பயந்தது. (நடந்துபோகின்றான்.)

பிரதீகாரீ. இதோ, இனிது விளக்கப்பட்டமையால் மிகச் சுத்தமாயும் யாகபசு நிற்பதாயும் உள்ள வேள்விச் சாலையின் உயர்ந்த சுற்றுநிலம் இருக்கின்றது. தாங்கள் இவ்வாயிற்படியின்மேல் ஏறுங்கள்.

துஷியந்தன். (மேல்ஏறி மெய்காப்பாளன் தோள்மேற்சாய்ந்துகொண்டு நிற்கின்றான்.) ஏடி வேத்திரவதி! இவ்விருடிகள் மாட்சிமை தங்கிய கண்ணுவரால் என்னிடத்தில் எதற்காக அனுப்பப்பட் டிருக்கலாம்? தவ வொழுக்கங்களை மேற்கொண்டு நடத்துகின்ற முனிவர் தவத்திற்கு ஏதேனும் இடையூறு நிகழ்ந்திருக்கலாமோ, அன்றித் தவவனங்களில் வசிக்கும் விலங்குகளுக்கு யாரேனும் தீங்கு செய்திருக்கலாமோ, அன்றி ஏதேனும் என்னுடைய தகாத ஒழுக்கத்தால் கொடிகள் மலராதிருக்கலாமோ என்று பலதிறத்தால் நிகழும் ஐயங்களால் இதுதான் என்று துணியமாட்டாமல் என் நெஞ்சங் கலங்குகின்றது.

பிரதீகாரீ. தம்முடைய கருமங்கள் இடையூறின்றி நடைபெறுதலால் மனம் உவந்து, தங்களுக்கு மரியாதை செய்தற் பொருட்டாகவே முனிவர் வந்திருக்கின்றனரென எண்ணுகின்றேன்.

(கௌதமியோடு சகுந்தலையை முன் நடத்திக்கொண்டு இருடிகளும், கஞ்சுகிபுரோகிதரும் வருகின்றனர்.)

கஞ்சுகி. சுவாமிகாள்! இவ்வழியே, இவ்வழியே வாருங்கள்.

சார்ங்கரவன். ஏசாரத்துவதா! மாட்சிமைதங்கிய இவ்வரசன் என்றும் நெறிபிறழாதவராகவே, மிகஇழிந்தசாதியோராயினும் ஒருவராவது தீ நெறிக்கட் செல்கின்றாரல்லர். இவ்வாறிருந்தும், மக்களியங்காத இடத்திலேயிருந்துபழக்கப்பட்டமையால் மக்கள்நிறைந்த இவ்விடத்தில் இருப்பது தீயினாற்சூழப்பட்ட வீட்டினுள் இருப்பதுபோல எனக்குத் தோன்றுகின்றது.

சாரத்துவதன். இந்நகரத்தினுட் புகுந்தவுடனே எனக்கு இவ்வாறுதோன்றியது வாய்மையேயாம்; தலைமுழுகினோன் ஒருவன் எண்ணெய் தேய்த்திருக்கும் ஏனையொருவனைப் பார்த்தாற்போலவும், பரிசுத்தமுடையோன் ஒருவன் அசுத்தமுடையோன் ஒருவனைக் கண்டாற்போலவும், விழித்தெழுந்த ஒருவன் உறங்குவோன் ஒருவனை நோக்கினாற்போலவும், வேண்டியவாறு இயங்குவான் ஒருவன் சிறைப்படுத்தப்பட்டான் ஒருவனைக் கண்ணுற்றாற்போலவும் சிற்றின்பத்தில் அழுந்திக்கிடக்கும் இவர்களைக்கண்டு நானும் உவர்ப்படைகின்றேன்.

சகுந்தலை. (அவசகுனத்தைக்குறித்து) அந்தோ! என்வலக் கண் ஏன்துடிக்கின்றது?

கௌதமி. குழந்தாய்! தீமை விலகக்கடவது! நின் கணவன் குடிக்குரிய தெய்வங்கள் நினக்கு நன்மை தருவனவாக! (நடக்கின்றனர்.)

புரோகிதர். (அரசனைச்சுட்டிக்காட்டி) ஓ துறவிகாள்! தன் அறங்கூறிருக்கையினை விட்டெழுந்தும் எத்திறத்தாரையும் எச்சாதியாரையுங் காப்பாற்றிவரும் மாட்சிமைதங்கிய வேந்தன் தங்கள் வருகையினை எதிர்நோக்கிக்கொண்டு அதோ இருக்கின்றார்! பார்மின்!

சார்ங்கரவன். ஓ பிராமணர் தலைவ! அஃதுண்மை யாகவே புகழத்தகுந்தது. ஆயினும் அதனைநாங்கள் ஒருபெரிதாக எண்ணவில்லை. பழங்கள் நிரம்பியிருத்தலால் மரங்கள் தலைகுனிகின்றன; புதுப்புனல் நிறைவினால் மேகங்கள் நெடுந்தூரந் தாழ்ந்து மிதக்கின்றன; நல்லோர் செல்வப் பெருக்கால் செருக்கடைவதில்லை; பிறர்க்குதவி புரிவோர் இங்ஙனம் இருப்பது இயற்கையேயாம்.

**பிரதீகாரி.** சுவாமி! அவர்கள் முகத்தில் சாந்தமான தேசசுகூரணப்படுகின்றது. ஆகையால் அவர்கள் தாம் மேற்கொண்ட காரியத்தில் உறுதியுடையவர்களா யிருக்கிறார்கள் என்று நம்புகின்றேன்.

**துஷியந்தன்.** (சகுந்தலையைப்பார்த்து) வதங்கின இலைகளின் நடுவே ஓர் இளந்தளிர் தோன்றுதல்போல நன்கு கட் புலனுகாத அழகிய உடம்பினளாய் இவ்விருடிகளின் நடுவில் முக்காடிட்டு வரும் இப்பெண் யாராயிருக்கலாம்?

**பிரதீகாரி.** சுவாமி! நானும் யோசித்துப் பார்த்தும் எனக்கும் ஒன்றும் விளங்கவில்லை. இவள் உருவமோ மிகவும் அழகாகத்தான் இருக்கின்றது.

**துஷியந்தன்.** அப்படித்தான் இருக்கட்டும். பிறர் மனைவியை உற்று நோக்குதல் ஆகாது.

**சகுந்தலை.** (மார்பில் கையைவைத்துத்தனக்குள்) ஓநெஞ்சமே! ஏன் இங்ஙனம் நடுங்குகின்றாய்? என் தலைவனது காதல் மிகுதியை அறிந்திருக்கின்றாயாகலின், சிறிது பொறுமையாயிரு.

**புரோகிதர்.** (முன்னேபோய்) சுவாமி! விதிப்படிஉபசரித்து வணங்கப்பட்ட துறவிகள் இதோ வந்திருக்கின்றனர். இவர்கள் தங்கள் குருவினிடமிருந்து ஏதோ செய்திகொண்டுவந்திருக்கிறார்கள். தாங்கள் தயைசெய்து அதனைக்கேட்டல்வேண்டும்.

**துஷியந்தன்.** அப்படியே கேட்கச் சித்தமா யிருக்கின்றேன்.

**துறவிகள்.** (கையைஉயரத்தூக்கி) ஓ அரசனே! உமக்கு வெற்றியுண்டாவதாக!

துஷியந்தன். உங்கள் எல்லார்க்கும் வந்தனஞ் செய்கின்றேன்.

துறவிகள். நீர் கோரிய எண்ணம் நிறைவேறுவதாக!

துஷியந்தன். முனிவருடைய தவவொழுக்கங்கள் இடையூறின்றி நடைபெறுகின்றனவா?

துறவிகள். நல்லோரைப் பாதுகாப்பதற்கு நீர் இருக்கும்போது தவவொழுக்கங்களுக்கு இடையூறு எவ்வாறுண்டாகும்? ஞாயிறு சுடர்விரிந்து விளங்குகையில் இருள் எவ்வாறு வரும்?

துஷியந்தன். இப்போதுதான் 'அரசன்' என்னும் என் பட்டப்பெயர் பொருளுடை மொழியாயிற்று. உலகினை நலப்படுத்துதற்கு மாட்சிமை தங்கிய காசியபர் நன்றாயிருக்கின்றனரா?

துறவிகள். மந்திர ஆற்றலுடைய முனிவர் சுகத்தைத் தம் வசத்திலேயே வைத்திருக்கின்றார்கள். அவர் உம்முடைய சுகத்தை முதலிற்கேட்கச்சொல்லி அதன்பின் இதனைத் தெரிவிக்கும்படி சொன்னார்.

துஷியந்தன். அவர் கட்டளை யாது?

சார்ங்கரவன். நீங்கள் இருவீரும் ஒருவரோடொருவர் உடன்பட்டு, என்மகளை நீர் மணம்புரிந்துகொண்டதை நான் உங்கள்மீதுள்ள அன்பினால் ஏற்றுக்கொள்ளுகின்றேன். நீரோ நன்குமதிக்கப் படுதற்குரியார் எல்லாருள்ளும் சிறந்தவராயிருக்கின்றீர்; சகுந்தலையோ தூய குணங்களெல்லாம் ஓர் உருவெடுத்து வந்ததுபோல் விளங்குகின்றாள்; நான்முகக்கடவுளோ, எல்லா உயர்குணங்களானும் ஒப்பான மணமகனையும் மணமகளையும் ஒன்று கூட்டினமையால் நெடுங்காலந்தனக்கிருந்த பழிச்சொல்லினின்றும்

நீங்கப்பெற்றான். ஆகையால், இல்லறவாழ்க்கையை இனிது நடப்பித்தற்குரிய துணையாகக் கருவுற்றிருக்கும் இவளை ஏற்றுக்கொள்வீராக.

கௌதமி. மேதகவுடையீர்! நான் சிலசொல்லவிரும்புகின்றேன். எனக்கு இதிற்பேசஇடமில்லை; ஏனென்றால், நீரும் இவளும் முதியோரை அனுசரித்தாவது உறவினரிடத்தில் கலந்து கொண்டாவது இதனைச் செய்தீர்களில்லை. உங்களிருவர்க்குள்ளேயே நடந்துபோன இதன் விஷயத்தில் நீங்கள் ஒருவர்க்கொருவர் நடந்து கொள்ளவேண்டிய முறையைப்பற்றி நான் என்ன சொல்லக்கூடும்.

சகுந்தலை. (தனக்குள்) என் நாயகன் யாதுசொல்வரோ தெரியவில்லையே?

துஷியந்தன். இஃது என்ன இது என்முன்னே!

சகுந்தலை. (தனக்குள்) இவர்கூறும் இச்சொற்கள் நெருப்பாயிருக்கின்றனவே!

சார்ங்கரவன். இஃதென்ன இதுவா? நீர் தாம் உலகநெறிகள் முற்றும் அறிந்தவராயிற்றே. மணமான பெண் ஒருத்தி மிகுந்தநல்லொழுக்கமுடையளாயினும் தன் உறவினர் குடும்பத்திலேயே இருப்பளாயின் அவள்மேல் வேறுவகையாய் உலகத்தார் ஐயுறுகிறார்கள்; ஆதலாற்றான் பெண்ணைச் சேர்ந்தவர்கள் தம்முடைய பெண் தன் கணவனால் வெறுக்கப்படினும் அவனுடனேயே அவளிருக்கவேண்டுமென விரும்புகின்றார்கள்.

துஷியந்தன். என்ன, இம்மாதரார் என்னால் முன்மணம் புரியப் பட்டாரா ?

சகுந்தலை. (தனக்குள் பெருந்திகிலோடு) ஓ நெஞ்சமே, நீ அஞ்சியது அப்படியேயாயிற்று.

சார்ங்கரவன். தான் செய்த ஒருகாரியத்திலுள்ள வெறுப்பால் தன் கடமையினின்றும் வழுவுதல் அரசனுக்குத் தகுதியாமா?

துஷியந்தன். பொய்யாகக் கற்பித்துக்கொண்டு ஏன் இக்கேள்வி கேட்கின்றீர்கள்?

சார்ங்கரவன். அதிகாரத்தாற் செருக்குற்று மயங்கினவர்களுக்கு இவைபோன்ற தீயகுணங்கள் பொதுவாய் உண்டாகின்றன.

துஷியந்தன். என்னை மிகவும் அவமதித்துப் பேசுகின்றீர்களே.

கௌதமி. குழந்தாய், சிறிது நேரம் வெட்கப்படாமலிரு. உன்முக்காட்டை எடுத்துவிடுகிறேன்; அதன்பின் உன்கணவன் உன்னைத் தெரிந்துகொள்வார். (சொல்லியபடியே செய்கிறாள்.)

துஷியந்தன். (சகுந்தலையைப்பார்த்துத் தனக்குள்)

வடுவறு பேரெழில் வயங்கவிவ் வயின்வருங்
கொடிபுரை யுருவினள் தன்னைக் கூடினான்
கடிமணம் அயர்ந்ததாக் கருதலாமையால்
விடியலிற் பனியகத் துள்ளமென் மல்லிகை
படிதரா துழிதரும் பைஞ்சிறை வண்டெனத்
தொடுதலும் விடுதலுந் துணியகில்லேனே.

(சிந்தித்துக்கொண்டிருக்கின்றான்.)

பிரதீகாரீ. இம்மன்னன் அறநெறி தவறாமைப் பொருட்டு அதில்எவ்வளவு குறியாய்இருக்கிறார்! அழகிற்சிறந்த இவ்வுரு எளிதிலே கிட்டவருவதைக் கண்டும் வேறுயார் இங்ஙனம் தாமதிப்பார்கள்?

சாரங்கரவன். ஓ அரசனே! நீர் ஏன் இங்ஙனம் வாளாதிருக்கின்றீர்?

துஷியந்தன். ஓ துறவிகாள்! நான் எவ்வளவுதான் நினைத்துப்பார்த்தாலும் இந்த அம்மையை நான் மணம் புரிந்ததாக நினைவுவரவில்லையே. கருப்பக்குறிகள் நன்றாய்த் தோன்றுகின்ற இம்மாதர்க்கு நானே கணவன் என்பது ஐயமா யிருக்கையில் இவரை நான் எவ்வாறு ஏற்றுக்கொள்ளலாம்?

சகுந்தலை. (அப்புறமாய்) மணம்புரிந்துகொண்டதைப் பற்றியே இப்போது ஐயம் நிகழ்ந்துவிட்டது, இனி என் ஆவல் எங்ஙனம் நிறைவேறப்போகின்றது!

சாரங்கரவன். தயை கூர்ந்து அங்ஙனஞ் சொல்லாதீர். உம்மாற் புணரப்பட்ட தம்மகளை ஏற்றுக்கொண்டதற்காக அம்முனிவரை நீர் அவமதித்தது பொருத்தமேதான்! திருடப்பட்டபொருளைத் திருடினவனுக்கே திருப்பிக் கொடுத்தலால் அம்முனிவர் உம்மைத்திருடனைப்போலவே செய்துவிட்டார்.

சாரத்துவதன். சார்ங்கரவா இனி நீ பேசுவதைநிறுத்து. சகுந்தலே! நாங்கள் யாது சொல்லவேண்டுமோ சொல்லினோம். அரசனோ இவ்வாறு சொல்லுகிறார். அவரைமெய்ப்பிக்கத் தகுந்ததாக நீ விடைசொல்.

சகுந்தலை. (தனக்குள்) அத்தகைய காதற்கிழமையே இந்த மாறுதல்நிலைக்கு வந்துவிட்டதாயின், இனி நினைப்பூட்டுதலாற் பயன் என்னை? நான் துன்பத்திற்கு ஆளாக வேண்டுமென்பது இங்கே விதிக்கப்பட்டிருக்கின்றது. (புறத்தே) என்ஆருயிர்த்தலைவா! (இதுபாதிசொல்லி) மணம் புரிந்ததே ஐயமா யிருக்கையில் இங்ஙனம் அழைத்தல்

கூடாது. ஓ பௌரவரே! துறவாசிரமத்தில் அவ்வாறெல்லாம் உடம்படு மொழிகள் சொல்லிக் கள்ளம் அறியாத என்னை ஏமாற்றிவிட்டு இப்போது இச்சொற்களைச் சொல்லித் தள்ளிவிடுவது உமக்குத்தகுதியாமா?

துஷியந்தன். (காதின்மேற் கைகளை வைத்து) பாவம் விலகக்கடவது! கரை புரண்டு செல்கின்ற யாறானது தனது தெளிவானநீரைக் கலங்கச்செய்து கரைமேலுள்ள மரங்களை வேரோடும் விழப்பண்ணுதல்போல என்னையும் இழிவாக்கி என்குலத்திற்கும் வடுவுண்டுபண்ணப் பார்க்கின்றையா?

சகுந்தலை. நல்லது, என்னைப் பிறனொருவன் மனைவியாக ஐயுற்று நீர் இப்படிச்செய்தால், இவ்வடையாளத்தால் உமது ஐயப்பாட்டை ஒழிக்கின்றேன்.

துஷியந்தன். இது நல்ல ஏற்பாடே.

சகுந்தலை. (மோதிரமிருந்த இடத்தைத்தடவி) ஆ! ஐயோ! என்விரலில் மோதிரத்தைக் காணேமே. (கௌதமியைய நடுக்கத்தோடு பார்க்கின்றாள்.)

கௌதமி. சக்கராவதாரத்திலுள்ள சசிதீர்த்தத்தை நீ குனிந்து வணங்குகையில் அம்மோதிரம் நழுவி விழுந்துவிட்டதுபோலும்.

துஷியந்தன். (புன்சிரிப்போடு) மகளிற்குச்சமயத்திற்கு இசைந்த உத்தி தோன்றுமென்பது இதுதான்.

சகுந்தலை. இங்கு ஊழ் தன்வலிமைபுலப்படுத்திற்று. நான் மற்றொருவிஷயம் சொல்லுகின்றேன்.

துஷியந்தன். இப்போது கேட்கவேண்டிய விஷயம் வந்துவிட்டது!

சகுந்தலை. நீர் ஒருநாட் புதுமல்லிகைப் பந்தரின்கீழ் உமது கையில் தாமரை இலையாற்செய்த கலத்திலே தண்ணீர் முகந்துவைத்துக்கொண் டிருக்கவில்லையா?

துஷியந்தன். நல்லது கவனமாய்க் கேட்கின்றோம்.

சகுந்தலை. அச்சமயத்தில், என் சுவிகாரபுத்திரனை தீர்க்காபாங்கன் என்னும் பான்கன்றானது வந்தது. நீர் 'அது முதலிற் குடிக்கட்டு'மென்று சொல்லித் தண்ணீரைக்காட்டி அதனை அருகிழுக்கமுயன்றீர். அஃது உம்மிடத்திற் பழகாததனால் உமது கையருகில் வரவில்லை. அப்போது நீர் 'ஒவ்வொருவரும் தம் இனத்தாரிடத்திலேயே நம்பகமுடையராயிருக்கின்றனர்; இவ்விஷயத்தில் இருவீரும் காட்டுத்தன்மை யுடையீர்' என்றுசொல்லி நகையாடினீரே.

துஷியந்தன். பொய்நிறைந்தனவான இவைபோன்ற தேன்மொழிகளாற் பெண்கள் தங்கருத்தை முடித்துக் கொள்ளுகின்றார்கள்; காமிகளோ ஏமாந்துபோகின்றனர்.

கௌதமி. பெரியீர்! அங்ஙனஞ் சொல்லாதீர். துறவாசிரமத்தில் வளர்ந்த இப்பெண் பொய்யே அறியாள்.

துஷியந்தன். துறவொழுக்கத்தினின்று வயதுமுதிர்ந்த அம்மா, தாழ்ந்த விலங்குகளிற் பெண்ணினத்திற்குங் கற்றுக்கொடாமலே இத்தகையதிறமை உண்டாவதாயின், பகுத்தறிவுடைய மக்களிடத்தில் அஃதெவ்வளவு மிகுதியாய்க் காணப்படுதல் வேண்டும்! குயிற்பெடைகள் தங்குஞ்சுகள் ஆகாயத்திற்பறக்கும்வரையில் அவை தம்மை வேறு பறவைகளைக்கொண்டு வளர்த்துவரல் உண்மையன்றோ?

சகுந்தலை. (கோபத்தோடு) கீழ்மகனே, உன்மனநிலைக்கு இணங்கப் பிறரையும் கருதுகின்றாய். அறக்கடமை என்

கின்ற சட்டையைப் போர்த்துக்கொண்டு மேலே புற்க ளால் மூடப்பெற்றுக் கீழே மறைந்திருக்கும் கிணற்றை யொத்த உன்னைப்போல் நடப்பார் வேறுயாருளர்?

**துஷியந்தன்.** (தனக்குள்) இவள் கோபமானது பொய்க் கலப்பில்லாததாய்த் தோன்றுதலால், இஃது என்மனத்தில் சந்தேகத்தை உண்டுபண்ணுகின்றது.

மறைவிற்செறிந்த காதற்பெருங்கிழமை மனக்கொளாது
குறையும்நினைவாற்கொடுமனம் வல்லென்றெனைக்குறித்துப்
பிறைபோற் புருவம் முரியப் பெருவிழிகள் சிவக்கச் சினம்
முறையே மிகுதல் மதன்வில் லிரண்டாய் முறித்திட்டதே.

(உரக்க) நன்மாதராய், துஷியந்தனுடைய செய்கை யாண்டும் அறியப்பட்டுள்ளது; இன்னும் இதனையான் நினை விடக் கூடவில்லையே.

**சகுந்தலை.** புருவமிசத்திற் பிறந்தவ ரென்கின்ற நம்பி க்கையால், நாவில் தேனும் அகத்தில் நஞ்சும் வைத்திருக் கின்ற இவர்கைக்கு நான் எளிதாக அகப்பட்டதுபற்றி இவர் என்னை வேசியாக்கிவிட்டது நன்றுதான்! (முன்றானை ஓரத்தால் முகத்தை மூடிக்கொண்டு அழுகின்றாள்.)

**சார்ங்கரவன்.** தானே அவசரப்பட்டுச் செய்தகாரியம் இப்படித்தான் துன்பத்தைத் தரும். ஆதலால் அந்தரங்க சேர்க்கையானது நன்கு ஆராய்ந்தறிந்த பின்னரே தான் செயற்பாலது. மனவியற்கை நன்கு தேறப்படாதாரோடு கொண்ட நட்புப் பகையாய் முடிகின்றது.

**துஷியந்தன்.** ஐய, இம்மாதரிடத்தில் நம்பிக்கை வை த்து எம்மை நீர் குற்றஞ் சுமத்தி வருத்தலாமா ?

**சார்ங்கரவன்.** (இகழ்ச்சியாய்) ஒன்றுக்கொன்று மாறு ட்டமான செய்தியைக் கேட்டுவிட்டீர். பிறந்தது முதல் கள்ள மென்னதென்றே கற்பிக்கப்படாத ஒருவருடைய

சொல் பொய்தான்; பகைவரை வஞ்சித்தலையே ஒரு கல்வியாகக் கற்கின்றவர் உண்மை பேசுதற்குத் தகுதியானவர்கள்தாம்!

துஷியந்தன். உண்மை பேசுகின்ற ஐயா, அது நம்மால் ஒப்புக்கொண்டதாகவே யிருக்கட்டும். ஆனால் இந்த அம்மையை வஞ்சித்தலால் நமக்கு வரும் ஊதியம் என்னை?

சார்ங்கரவன். நிரயத்தில் விழுவதுதான்.

துஷியந்தன். புருவமிசத்திற் பிறந்தோர் நிரயத்தில் விழ விரும்புகின்றனரென்பது நம்பத்தகாத தொன்றும்.

சாரத்துவதன். சார்ங்கரவா, மேன்மேற் பேசுவதிற் பயன் என்னை? குருவின் கட்டளைப்படி செய்துவிட்டோம். இனி நாம் திரும்பிப் போவோம். (அரசனைநோக்கி) அதோ நும்மனைவி யிருக்கின்றாள்; நீர் அவளை ஏற்றுக்கொள்ளினுங் கொள்ளுக, தள்ளிவிடினும் விடுக. தன் மனைவியினிடத்து எவ்வகையான அதிகாரஞ் செலுத்தினும் அது பொருந்துவதேயாம். அம்மே கௌதமீ புறப்படுங்கள். (அவர்கள் புறப்படுகின்றனர்.)

சகுந்தலை. எப்படி? இக்கொடியவன் றான் என்னை வஞ்சித்துவிட்டான்; நீங்களுமா என்னை விட்டுப் போகின்றீர்கள்?

(அவர்களுக்குப் பின்னே புறப்படுகின்றாள்.)

கௌதமீ. குழந்தாய் சார்ங்கரவா, இதோ சகுந்தலை பரிவுறும்படி அழுதுகொண்டு நமக்குப் பின்னே வருகின்றாளே. தன் கணவனே தன்னைத் தள்ளிவிட்டுப் பெருங் கொடுமை செய்தால் என் மகள் என்ன செய்வாள்?

சார்ங்கரவன். (கோபத்தோடுதிரும்பி) தூர்த்தே! சுதந்தரமா யிருக்கப் பார்க்கின்றையோ?

(சகுந்தலை அஞ்சி நடுங்குகின்றாள்)

சார்ங்கரவன். சகுந்தலே, அரசன் சொல்லுகிறபடியே நீ இருந்தாயானால், அவர் குலத்தினின்றும் விலகிய உனக்கு உன் தந்தை தான் யாது செய்யக்கூடும்? அவ்வாறன்றி நின் ஒழுக்கம் சுத்தமானதென்றே நீ அறிந்தாயானால் நின் கணவன் வீட்டில் அடிமையாகவாயினும் இருத்தலே உனக்குத் தக்கதாகும். நில், நாங்கள் போகிறோம்.

துஷியந்தன். ஓ முனிவரே, என் இந்த அம்மையை நீர் ஏமாற்றுகின்றீர்? வெண்டிங்கள் அல்லிப் பூவினையே அலரச் செய்கின்றது; செஞ்ஞாயிறோ தாமரைப் பூவையே மலரச் செய்கின்றது; ஐம்பொறிகளையும் தம் வயப்படுத்தியிருப்பவர்கள் பிறன்மனையாளைத் தழுவுதற்கு ஒருப்படமாட்டார்கள்.

சார்ங்கரவன். மற்றை விஷயங்களில் பிரவேசித்திருத்தலால் முன் நடந்ததை மறந்து போயிருக்கும் நீர் எவ்வாறு பாவத்துக்குப் பயப்படுவீர்?

துஷியந்தன். இவ்விரண்டில் எதுஉயர்ந்தது? எது தாழ்ந்தது? தெரிவிக்கும்படி தங்களைத்தான் கேட்டுக்கொள்ளுகின்றேன். நான் மறந்திருந்தாலு மிருக்கலாம், அல்லது இம்மாதரே பொய்கூறி யிருந்தாலு மிருக்கலாம். இவ்வையப்பாட்டில், மனையாளாயின் அவளை நீக்குவது நன்றோ, அல்லது பிறன் மனையாளாயின் அவளைச் சேர்ந்து குற்றம் அடைதல் நன்றோ?

புரோகிதர். (ஆழச்சிந்தித்து) அப்படியானால், தாங்கள் இவ்வாறு செய்யுங்கள்.

துஷியந்தன். நல்லது தெரிவியுங்கள்.

புரோகிதர். பிள்ளைப்பேறு வரையில் இந்த அம்மையார் என் வீட்டில் இருக்கட்டும்; நான் இதனை ஏன் சொல்லுகிறேன் என்று கேட்பீர்களானால், உமக்கு முதன் முதற்

பிறக்கும் புதல்வன் மன்னர் மன்னனு யிருப்பானென்று முனிவர்கள் முன்னரே வரந்தந்து உம்மை ஆசீர்வதித்திருக்கின்றார்கள். இம்முனிவர் மகளார் வயிற்றிற் பிறக்கும் மகன் அவ்வரசடையாளங்கள் உடையனு யிருந்தால், இம் மங்கையாரை நீர் ஏற்றுக்கொண்டு அந்தப்புரத்தில் வைக்கலாம். அப்படி யில்லாவிட்டால் இம்மாதரார் தாமே தம் தந்தை வீட்டுக்குப் போய்விடுகின்றார்.

துஷியந்தன். தாங்கள் விரும்புகிறபடியே செய்க.

புரோகிதர். மகளே, என் பின்னேவா.

சகுந்தலை. ஓ பெருமைதங்கிய பூதேவி! நீ வெடித்து என்னை ஏற்றுக்கொள். (அழுதுகொண்டு புரோகிதரோடு போகின்றாள்.)

(துறவிகளும் போய்விட்டார்கள்)

(திரைக்குப்பின்னே)

ஆச்சரியம்! ஆச்சரியம்!

துஷியந்தன். (உற்றுக்கேட்டு) அங்கே என்ன நடந்திருக்கலாம்?

(புரோகிதர் வருகின்றார்).

புரோகிதர். (வியப்போடு) பெருமான், மிகவும் அதிசயிக்கத் தக்கதான ஒன்று நேர்ந்தது.

துஷியந்தன். எப்படி, என்ன?

புரோகிதர். கண்ணுவ முனிவர் சீடர்கள் போய்விட்ட பின், அப்பெண் தன் கைகளை உயர எறிந்து ஓலமிடப்புகுந்தாள்.

துஷியந்தன். அப்புறம் என்ன?

புரோகிதர். உடனே அப்ஸரஸ்தீர்த்தத்திற்கு அருகாமையில் பெண் வடிவுடைய ஓர் ஒளியுருத்தோன்றி அவளைத் தூக்கிக்கொண்டு சென்றது.

(எல்லாரும் இறும்பூதடைகிறார்கள்.)

துஷியந்தன். சுவாமி, அவ்விஷயத்தைத் தான் நாம் முன்னரே வெளிப்படையாய் விலக்கி விட்டோமே; இன்னும் அதனை வீணாய் யோசிப்பானேன்?

புரோகிதர். (அரசனை நோக்கி) உமக்கு வெற்றி சிறக்க! (போய்விட்டார்.)

துஷியந்தன். வேத்திரவதி! நான் மனக்கலக்க முற்றிருக்கின்றேன். படுக்கை யறைக்குப் போகும் வழியைக் காட்டு.

பிரதீகாரி. பெருமான், இவ்வழியே இவ்வழியே வாருங்கள். (வழிகாட்டிச் செல்கின்றாள்)

துஷியந்தன். என்மனைவியல்லள் என்று என்றால் நீக்கப்பட்ட அம்முனிவர்மகளை நான் நினைவுகூரக் கூடாதது உண்மையே; ஆயினும், என்நெஞ்சம் மிகவருந்துவதை உற்றுநோக்கினால் அஃது அவளைநான் மணஞ்செய்த துண்டென்று காட்டுவதாகவே தோன்றுகின்றது. (எல்லாரும் போய்விடுகின்றனர்.)

ஐந்தாம்வகுப்பு முடிந்தது.

---



## ஆரும்வகுப்பு.

——()——

களம்: ஒரு தெரு.

(அரசன்மைத்துனனான கொத்தவாலும், பின்னேகை இறுகக்கட்டப்பட்ட ஒருவனை நடத்திக்கொண்டு இரண்டு சேவகர்களும் வருகின்றனர்.)

சேவகர்கள். (ஒருமனிதனை அடித்துக்கொண்டு) அடே கள்வா! அரசன்பெயர் செதுக்கப்பட்டு இரத்தினம் பதித்திருக்கும் இந்தமோதிரம் உனக்கு எப்படி அகப்பட்டது சொல்.

மனிதன். (நடுங்கிக்கொண்டு) நான் அப்படிச் செய்திறவனல்லங்க. என்னைத்தொந்தரவு செய்யாதிங்க.

முதற்சேவகன். என்ன? உன்னைச் சிறந்தபார்ப்பானென்று நினைத்து அரசனே உனக்கு இதைப் பரிசாக் கொடுத்தாரோ?

மனிதன். இப்போ நான் சொல்றதைக் கேளுங்க நான் சக்ராவதாரக் கரையிலிருக்கிற செம்படவன்.

இரண்டாஞ்சேவகன். அடேதிருடா, உன்சாதியை யாரடா கேட்டா?

கொத்தவால். ஏ சூசகா! அவன் சொல்லவேண்டியதெல்லாம் ஒழுங்காகச் சொல்லட்டும்; அவனை இடையிலே தடுக்கவேண்டாம்.

சேவகர் இருவரும். தங்கள் உத்தரவின்படியே, மேலே சொல், மேலே சொல்.

மனிதன். மீன்பிடிக்கிற தூண்டிமுள்ளு, வலே, இதுகளைக்கொண்டு நான் என் குடும்பத்தைக் காப்பாத்தி வருரேன் சாமி.

சோத்தவால். (நகைத்து) உன்தொழில் பரிசுத்தமானதுதான்!

மனிதன். சாமி, தலைமுறை தலைமுறையாவருற தொழிலு இளிவாயிருந்தாலும் அதை விட்டுடக் கூடாதுங்க. ஒருபடிச்ச பாப்பான் தான் எரக்கமுள்ளவனாயிருந்தாலும், யாகஞ்செய்யிறப்பக் கொரூரமான கொலெ செய்யிறானல்லோ.

கோத்தவால். நல்லது, பிறகு என்ன?

மனிதன். ஒருநாள் ஒருசெவப்புமீனைப் பிடிச்சு அரிஞ்சேன். அப்போ அது வயித்துக்குள்ளே இந்த ரெத்தின மோதிரம் மின்னிச்சு. அதைக்கண்டு எடுத்துக்கிட்டுவந்து விக்கக்காட்டினேன் அப்போ நீங்க பிடிச்சுக்கிட்டீங்க, நீங்க என்னைக் கொண்ணாலுஞ்சரி விட்டாலுஞ்சரி இதுதான் இது என்கைக்கிவந்த வளி.

கோத்தவால். ஏசானுகா, இவன்மேல் பச்சைமீன் நாற்றம் வீசுகிறபடியால், இவன் சந்தேகமில்லாமல் முதலை தின்கிற செம்படவன்றான். ஆகையால், இவன்கையில் இம்மோதிரம்வந்தது யோசிக்கத் தகுந்ததுதான். நாம் அரண்மனைக்கே போகலாம்.

சேவகர்கள். நல்லது, அடே முடிச்சவிக்கிப்பயலே முன்னே நடடா!

(எல்லாரும்போகிறார்கள்.)

கோத்தவால். ஏசூசகா, இம்மோதிரம் அகப்பட்ட வகையைப்பற்றி அரசனுக்குத் தெரிவித்து, அவர் உத்தரவுபெற்று நான் திரும்பிவரும்வரையில், இவனை இந்தவாசலிலேயே கவனமாய்ப் பார்த்துக்கொள்.

இருவரும். அப்படியே தாங்கள் அரசனுடைய கருணையைப் பெறப்போங்க.

(கோத்தவால் போகின்றான்.)

முதற்சேவகன். அடே சானுகா, எசமான் போய் ரொம்பநாளியாயிட்டே.

இரண்டாஞ்சேவகன். ஆமா, சமயம் பார்த்தல்லோ ராசாகிட்டப் போகவேணும்.

முதற்சேவகன். அடேசானுகா, இந்தப்பயலெ கொலே பண்ணுறதுக்கு எப்போ இவன்மேலே பூச்சூட்டுவே னென்னு என்கை துடிக்குது. (செம்படவனைக்குறித்துக் காட்டுகிறான்.)

மனிதன். காரணமில்லாமே கொலேபண்ணுறது உங்களுக்கு ஞாயமல்லங்களே சாமி.

இரண்டாஞ் சேவகன். (பார்த்து) நம்ம எசமான் ராசா கிட்டே உத்தரவு பெத்துக்கிட்டுக் கையிலே ஒரு வடு வைச்சுகிட்டு இந்தவளியா வருராங்க. அடே நீ கழுகுக்கு இரையாப்போவே, அல்லாட்டி நாமுகத்தைப்பாப்பே.

(கோத்தவால் வருகிறான்.)

கோத்தவால். ஏ சூசகா, இந்த வலேஞனை விட்டுவிடு. இவன் இம்மோதிரத்தைக் கைக்கொண்டவகை மெய்தான்.

சூசகன். தாங்கள் சொல்லுறபடியே.

இரண்டாஞ் சேவகன். இவன் எமங்கிட்டப்போயித் திரும்பிவந்திருக்கிறான். (செம்படவனைக் கட்டவிழ்த்து விடுகின்றான்.)

வலேஞன். (கோத்தவாலே வணங்கி.) சாமி, என்உயிரு உங்களுதுதான்.

கோத்தவால். இதோ அரசன் மோதிரத்திற்குள்ள விலையை உனக்குப் பரிசாகக் கொடுக்கும்படி உத்தரவுசெய்திருக்கின்றார். (அவனுக்கு நல்லபரிசில் கொடுக்கிறான்.)

வலேஞன், (பணிந்து ஏற்று) சாமி, எனக்கு ரொம்ப ஒவகாரம் பண்ணினிங்க.

சூசகன். கனுவிலே யிருந்து எறக்கி யானெழுதுகிலே வைச்சா ஒவகாரந்தான்.

சானுகன். எசமான், இந்தப் பரிசெப்பாத்தா ராசா வுக்கு இந்த மோதிரத்திலே பிரியம் இருக்கிறுப்போலே தோணுதே.

கோத்தவால். அதிற் பதிக்கப்பட் டிருக்கிற விலை யுயர்ந்த இரத்தினத்திற்காக அவர் அதனை விரும்பினதாக எனக்குத் தோன்றவில்லை. அதனைக்கண்டவுடனே அரசன் தனக்கு மிகஇனிய யாரோ ஒருவரை நினைத்துக்கொண் டார்; இயற்கையிலே அவர் அமைதி யுடையரா யிருந்தா லும், சிறிது நேரம் அவர் கண்களில் நீர் ததும்பிற்று.

சூசகன். தாங்க ராசாவுக்கு நல்ல ஒதவி செய்திங்க.

சானுகன். ஏன், இந்த மீங்கொல்லிப் பயலுக்கு ஒத் தாசை பண்ணினிங்க என்று சொல்லேன். (வலைஞனைப் பொறமையுற்றுப் பார்க்கின்றன்.)

வலைஞன். சாமீ, இதிலே பாதி உங்கபூச்செலவுக்கு வச்சுக்கிங்கோ.

சானுகன். அவ்வளவு சரிதான்.

கோத்தவால். ஏ வலையா, நீ இப்போது எனக்கு நெரு ங்கிய சினேகிதனுய் விட்டாய். முதலில் உண்டாகும் சினே கமானது கள்ளுக்கு எதிரில் ஆகவேண்டுமென்பது நமது வழக்கம். ஆகையால், நாம் கள்ளுக்கடைக்கு நேரே போ வோம் வா.

(எல்லாரும் போய்விட்டார்கள்.)

பிரவேசகம் முற்றியது.

(சானுமதி என்னும் ஓர் அரம்பைமாது ஒரு விமானத்தில் வருகின்றாள்.)

சானுமதி. என் முறைப்படி செய்ய வேண்டுவதை அப்ஸரஸ்தீர்த்தக் கரையில் போயிருந்து செய்து விட்டேன். இப்போது முனிவர்கள் நீராடும் சமயம் வந்துவிட்டது. இனி நானே நேரில்போய் இவ்விராஜருஷியின்நிலைமையைக் காண்கிறேன். மேனகையின் நட்பினால் சகுந்தலை எனக்கு என் பிள்ளைபோல் இருக்கின்றாள். தன் புதல்வியின் பொருட்டாகவே என்னை அவள் அனுப்பி யிருக்கின்றாள். (சுற்றிப்பார்த்து) விழாக் கொண்டாடுதற்கு உரிய இந்தப் பருவத்திலேயுங்கூட அரசன் அரண்மனையில் ஏதோர் ஆரவாரமுங் காணப்படாம லிருப்பது ஏனோ! சிந்தித்த மாத்திரத்தில் எல்லாவற்றையும் அறியக்கூடிய சத்தி என்னிடம் இருக்கிறது; ஆனாலும், என் தோழி சொல்லியதை நான் பெருமைப்படுத்தவேண்டும். நல்லது, திரஸ்கரணி என்னும் வித்தையால் இந்தத் தோட்டக்காரிகளுக்குப் பக்கத்திலேயே இவர்கள் காணக்கூடாமல் மறைந்து நின்று எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளுகின்றேன். (விமானத்தை விட்டிறங்கி நிற்கின்றாள்.)

(மாவின் மலர்முகையைப் பார்த்துக்கொண்டு ஒரு சேடியும் அவட்குப் பின்னே மற்றொருத்தியும் வருகின்றனர்.)

முதற்சேடி.

விழுத்தக்க வேனிலுயிர் விரிதரவே கொண்டு
முழுச்செம்மை பசுமையுடன் வெண்மையெனு மூன்றுங்
குழைத்திட்டா லெனவயங்கு கொழுமாவின் முகையே!
தழைப்பருவ நற்குறியாந் தயங்குனையென் றறிந்தேன்.

இரண்டாஞ்சேடி, ஏடி பரபிருதிகே! என்ன இங்கே தனியே பேசிக்கொண் டிருக்கின்றாயே?

முதற்சேடி. மதுகரிகே! மாமுகையைக் கண்ட மாத்திரத்திலே பரபிருதிகை (அதாவது குயில்) களிமயக்க மடைவது வழக்கமாயிற்றே.

இரண்டாஞ்சேடி. (மகிழ்ச்சியோடு விரைந்து வந்து) எப்படி, வேனிற்காலம் வந்து விட்டதா ?

முதற்சேடி. ஓ மதுகரிகே! (அதாவது ஓ வண்டே!) களிமயக்கத்தோடு பாடிக்கொண்டு திரியுங்காலம் உனக்கு வந்துவிட்டது.

இரண்டாஞ்சேடி. தோழி, நான் நுனி விரலை ஊன்றிக் கொண்டு மாமுகையைப் பறிக்கும்போது என்னைத் தாங்கிக்கொள்; பிறகு நான் காமதேவனை வழிபடுகின்றேன்.

முதற்சேடி. அந்த வழிபாட்டினால் வருகிற பலத்தில் எனக்குப்பாதி கொடுப்பையானால்தான் அப்படிச் செய்வேன்.

இரண்டாஞ்சேடி. நம் உயிர் ஒன்றாகவும் உடம்புமாத்திரம் இரண்டாகத் தோன்றுவதனால், நீ அது சொல்லாவிட்டாலும் அப்படியேதான் நடக்கும். (தன் தோழியால் தாங்கப்பட்டபடியே நின்றுகொண்டு மாமுகையைப் பறிக்கின்றாள்.) ஆ! இந்த மாமுகைகள் முழுதும் இதழ் விரியாதிருந்தாலும் காம்பிலிருந்து பறிக்கப்பட்டவுடனே என்ன மணம் வீசுகின்றது! (இரண்டு அகங்கைகளையுஞ் சேர்த்து) ஏ மாமுகையே!

புறஞ்சென்ற காதலரைப் பிரிந்திருக்கும் பூவையரை
மறஞ்செய்து மதனெடுத்து வளைவில்லில்தொடுத்தல்பெறுந்
திறஞ்செய்த ஐங்கணையுட் சிறப்பெய்தி மற்றவர்மேல்
நிறஞ்சென்று பாய்வையென நின்னையவற் கிட்டனனால்.

(சடுதியில் திரையை விலக்கிக்கொண்டு கஞ்சுகி என்னுங் காவலாளன் கோபத்தோடு வருகின்றான்.)

கஞ்சுகி. அடி அறிவிலாய்! அப்படிச் செய்யாதே. மன்னன் வேனில்விழாக் கொண்டாடக் கூடாதென்று தடைசெய்திருக்கையில், நீ ஏன் இந்த மாமுகையைப் பறிக்கின்றாய்?

இரண்டுசேடிமாரும். (அஞ்சி) தாங்கள் பொறுக்கவேண்டும்; அவ்வாறு கட்டளை பிறந்திருப்பது எங்களுக்குத் தெரியாது.

கஞ்சுகி. ஆ! அரசனுடைய கட்டளையைக் கேட்டுப் பசிய மரங்களும் அவற்றிற் குடிகொண்டிருக்கின்ற பறவைகளும் அடங்கி நடக்கையில் நீங்கள் அதனைக் கேளாதது எப்படி?

செழுமா மரங்கள் கொழுமுகை அரும்பியும்
பொன்றுகள் பெறுமை கண்டிலிர் கொல்லோ;
குரவமுகிழ் நிரம்பி நெடுநாளாகியும்
விரியா திருத்தல் தெரியிலிர் கொல்லோ;
பனிநாட் கழிந்து நனிநா ளாகியுஞ்
சேவலங் குயில்கள் வாய்திறவாவே;
காமவேளும் புட்டிலி லெடுத்த
நாம வெங்கணை புகுத்தி
அச்சமிக் கனனென அறிகுவென்மாதே.

சானுமதி. இனி ஐயமேயில்லை; தவவொழுக்கத்தோடு கூடிய அரசனனவர் மிகுந்த ஆற்றலுடையவர்தாம்.

முதற்சேடி. ஐய! மன்னன் மைத்துனரான மித்திராவசு என்பவர் அரசனுக்கு அடித்தொழும்பு செய்து கொண்டிருந்த எங்களை அங்கிருந்து இங்கனுப்பி இந்த உய்யான வனத்தைப் பாதுகாக்கும்படி செய்து சிலநாட்கள் ஆயின.

அப்படி வந்துவிட்டமையினாலேதான் எங்களுக்கு இச் செய்தி முன்னமே தெரியாமற் போயிற்று.

கஞ்சுகி. ஆனால் நல்லது, இனிமேல் திரும்பவும் நீங் கள் இவ்வாறு செய்யப்படாது.

சேடியார் இருவரும். ஐய, வேனில்விழா நடக்கவொட் டாமல் அரசன் நிறுத்திவிட்டதற்குக் காரணம் தெரிந்து கொள்ள ஆவலுடையோமா யிருக்கின்றோம். எங்களுக்குத் தெரிவிப்பதில் குற்றமில்லாவிட்டால் தாங்கள் அதனைச் சொல்ல வேண்டுகிறோம்.

சானுமதி. ஆடவர்கள் விழாக்கொண் டாடுவதில் உண் மையிலே பிரியமுள்ளவர்கள்; ஆகையால், தக்ககாரணம் இருக்கவேண்டும் தான்.

கஞ்சுகி. இது பலருக்குத் தெரிந்தது தான், உங்களுக் குச் சொல்லாமல் இருப்பானேன்? சகுந்தலையை ஏற்றுக் கொள்ளாமல் தள்ளிவிட்ட பழிச்சொல் உங்கள் காதுக்கு எட்டவில்லையா?

இருவரும். மோதிரம் அகப்பட்டவரையில் அரசன் மைத்துனர் வாயினாற் சொல்லக்கேட்டோம்.

கஞ்சுகி. அப்படியானால் சொல்லவேண்டியது இன் னுஞ் சிறிது தான் உள்ளது. தனது கணையாழியைக் கண்ட வுடனே தான் சகுந்தலையை முன்மெய்யாகவே மணம்புரிந் ததை நினைந்துகொண்டு பின் மிக்கமறதியினால் அவளை ஏற் றுக்கொள்ளாமல் தள்ளிவிட்டதைப் பற்றி மன்னன் நிரம் பவும் இரக்கப்பட்டுக்கொண் டிருக்கின்றார். அதனாலே,

இன்பநுகர்பொருளெல்லாம் வெறுத்துவிட்டார்
இனிய மந்திரிமாரைக் கலவார் முன்போல்
கண்ணுறக்கம் இரவெல்லாம் பெறமாட் டாராய்க்
கட்டில்மிசை யிங்குமங்கும் புரளுகின்றார்

தன்பெரிய மனைநல்லார் பேசும்போது
தண்மையினுற் சிலசொல்லுஞ் சொல்லினுள்ளும்
பெண்ணரசி சகுந்தலையைப் பிழைத்துச்சொல்லிப்
பெரிதுவரும் நாணத்தாற் கலங்குகின்ருர்.

சாநுமதி. எனக்கு இது நல்ல செய்தியே!

கஞ்சுகி. இந்தத் துயரத்தினுலேதான் மன்னன்விழாக் கொண்டாடாமல் தடுத்துவிட்டார்.

இருவரும். அது நியாயந்தான்.

(திரைக்குப்பின்னே.)

தாங்கள் முன்னே செல்லுங்கள்.

கஞ்சுகி. (உற்றுக்கேட்டு) ஓ! மன்னன் இவ்வழியேதான் வருகின்ருர். நீங்கள் உங்கள் தொழிலைச் செய்து கொண்டிருங்கள்.

இருவரும். அப்படியே. (போய்விட்டார்கள்.)

(கழிந்தநந்து இரங்கும் கோலத்திற்கு இசைவான உடையோடு
அரசனும், விதூஷகன் பிரதீகாரிகளும் வருகின்றனர்.)

கஞ்சுகி. ஆ! எந்த வகையான நிலைமையிலும் அழகிய வடிவமானது எவ்வளவு அழகாகவே விளங்குகின்றது! அவ்வளவு கவலையோடு கூடியிருந்தாலும் அரசன் கண்ணை மருட்டத்தக்க தோற்ற முடையராகவே யிருக்கின்ருர். ஏனெனில்,

சிறப்பணி கலன்கள் வெறுப்புடன் நீக்கி
இடதுகை முன்பொற் கடகம் பிணைந்தும்
நெட்டுயிர்ப் பெறிதலிற் றுப்பிதழ் விளர்த்துந்
துயிலா திருத்தலிற் பயில்விழி யிடுங்கியும்
உடல்மிக மெலிவுற லாயினுஞ் சுடர்மணி

தேய்த்தொறுந்தேய்த்தொறும்வாய்ந்துருக்குறைந்து
நிறமிக வுறுதல்போல
இறைவன் மேனியும் ஒளியாறுதே.

சானுமதி. (அரசனைப் பார்த்து) சகுந்தலை இவரால் தள்ளப்பட்டாலும் அவள் இவரை நினைந்து உருகுதல் தகுதிதான்.

துஷியந்தன். (சிந்தனையோடு மெல்லநடந்து) மான்பிணை போன்ற விழிகளையுடைய என்காதலி எழுப்பியபோதெல்லாம் எழுந்திராது உறங்கிக்கிடந்த இப்பாழும் நெஞ்சமானது, இப்போது பரிவால் துன்பம் அடைவதற்கே விழித்துக் கொண்டது!

சானுமதி. ஆ! அவ்வறியாத பெண்ணின் அதிஷ்டம் அப்படியோ!

விதூஷகன். திரும்பவும் இவரைச் சகுந்தலை நோயானது பிடித்துக்கொண்டது. இவர்க்கு எப்படிச் சிகிச்சை செய்து இதனைத் தீர்க்கிறதென்று எனக்குத் தெரியவில்லை.

கஞ்சுகி. (கிட்டவந்து) வேந்தனுக்கு வெற்றிசிறக்க! பெருமான், உய்யானவனத்திற் பலவிடங்களையும் போய்ப் பார்த்தேன். இன்பம் நுகர்தற்குரிய எந்தவிடத்திலும் தங்கள் விருப்பம்போல இருக்கலாம்.

துஷியந்தன். ஏடி வேத்திரவதி, பிசுனரென்னும் அமைச்சரிடத்தில் நான் சொன்னதாக இவ்வாறு சொல்: "இரவில் நெடுநேரங் கண்விழித்திருந்தமையால் இன்று அறங்கூறும் அவையத்திற்கு வர நமக்குக் கூடாமையா யிருக்கின்றது. தங்களால் ஆலோசனை செய்யப்பட்ட குடிமக்கள் காரியங்களை ஏட்டில் எழுதி நம்மிடம் அனுப்புவியுங்கள்."

பிரதீகாரி. வேந்தன் கட்டளைப்படியே (போய்விடுகிறாள்.)

துஷியந்தன். ஏடா வாதாயனு! நீயும் உன் காரியத்தைப் பார்க்கப்போ.

கஞ்சுகி. மன்னன் கட்டளைப்படியே. (போய்விடுகிறன்)

விதூஷகன். ஓர் ஈயும் இல்லாமல் ஓட்டிவிட்டீரே. பகற்கால வெப்பத்தை நீக்குதலால் குளிர்ச்சியாயும் இனிதாயும் இருக்கின்ற இவ்வுய்யானவனத்தின் இந்த விடத்தில் இனி நீர் விநோதமா யிருக்கலாம்.

துஷியந்தன். தோழா, "பட்டவிடத்தே படும், கெட்டகுடியே கெடும்" என்னும் பழமொழி சிறிதும் பொய்யன்று.

துறவிமகள் மேல்வைத்த தொல்காதல் மறைத்த
மறதியெனு மிருள்நெஞ்சை மற்றகன்ற பின்னே
உறவருந்து மெனைக்குறியிட் டலைப்பதற்கு மதனன்
நிறமாவின் முகைகையைவில்லில் நிறுத்துகின்றன் என்னே!

விதூஷகன். சிறிது பொறும்; இந்த ஊன்றுகோலால் மதனனுடைய அம்பைஅடித்து அழிக்கின்றேன். (கோலைத்தூக்கி மாம்பூவை அடிக்கப் போகின்றன்.)

துஷியந்தன். (புன்சிரிப்போடு) அஃதிருக்கட்டும், பார்ப்பானுடைய வலிமை தெரிந்ததுதான். தோழனே, எந்த இடத்திலிருந்துகொண்டு என்காதலியைச் சிறிது ஒத்திருக்கும் பூங்கொடிகளைப் பார்த்து இன்புறலாம்?

விதூஷகன். மல்லிகைப் பந்தரின்கீழ்ப் பொழுது போக்குவீர் என்றும், நம்மால் நமதுகையினாலேயே சித்திரபடத்தில் எழுதப்பட்ட சகுந்தலையின் ஓவியத்தை அவள் அங்கே கொண்டுவர வேண்டுமென்றும் நீர் முன்னமேதான் சதுரிகை என்னுஞ் சேடிக்குச் சொல்லியிருக்கின்றீரே.

துஷியந்தன். நெஞ்சத்தை உவப்பிக்கிறதற்கு அது தகுதியான இடந்தான். அதற்குப் போகும் வழியைக் காட்டு.

விதூஷகன். வேந்தன் இவ்வழியே இவ்வழியே வருக. (இருவரும் நடந்துபோகின்றார்கள்; சானுமதியும் பின்றொடர்கின்றாள்.)

விதூஷகன். இதோ! சலவைக்கல்லா லிருக்கை யிடப்பட்டுப், பூக்கள் அலர்ந்து அழகாய்த் தோன்றும் இந்த மல்லிகைப் பந்தர் நம் வரவை மகிழ்ந்து ஏற்பதுபோலத் தோன்றுகின்றது! இனி நீர் இதனுள் போயிருந்து அமரலாம்.

(இருவரும் புகுந்து இருக்கின்றனர்)

சானுமதி. இந்தக் கொடியின் பக்கத்தே நின்றுகொண்டு என் சினேகிதியின் ஓவியத்தைக் காண்கின்றேன். அதன்பின், அவள் கணவன் அவள்மேலுள்ள தன் காதல் மிகுதியை எவ்வெவ் வகையிலே வெளிப்படுத்தினாரோ அவற்றை யெல்லாம் விரித்துரைப்பேன். (அவ்வாறே கொடியின் பக்கத்தே நிற்கின்றாள்.)

துஷியந்தன். நண்பா, சகுந்தலையி னிடத்து முந்தி நடந்தவற்றை யெல்லாம் இப்போது நினைந்துகொண்டேன்; உனக்கும் அவற்றைச் சொன்னேனே; நான் அவளைத் தள்ளிவிட்டபோதும் நீ என் பக்கத்திலில்லை, அல்லது அதற்கு முந்தியாயினும் நீ அவள் பெயரைச் சொன்னா யில்லை. என்னைப் போலவே நீயும் மறந்துவிட்டனையோ?

விதூஷகன். நான் மறக்கவில்லை. ஆயினும், நீர் எல்லாஞ் சொல்லிய பின் முடிவிலே "இவையெல்லாம் உண்மையல்ல, வெறும் பரிகாசத்திற்காகவே சொன்னேன்" என்றீரே. நானோ களிமண்மூளை யுள்ளவனாதலால், நீர் சொல்லியதை உண்மை என்றெடுத்துக்கொண்டேன். ஆனாலும், எல்லாவற்றிலும் ஊழ்வலிது.

சானுமதி. உண்மையில் அஃது அப்படித்தான்!

துஷியந்தன். (சிந்தித்து) ஓ நண்பா! என்னைக் காப் பாற்று!

விதூஷகன். ஐயா, இஃது என்ன? இது நமக்குத் தக்கதன்று. அறிவுடையோர் தாம் மனத் துயரத்தால் வருந்துவதற்கு ஒருபோதும் இடங்கொடுப்பதில்லை. பெரும் புயற் காற்றிலும் மலைகள் அசையாமல் இருக்கவில்லையா?

துஷியந்தன். என்னால் விலக்கப்பட்ட துன்பத்தால் என் காதலி அடைந்த நிலையை யான் நினைவுகூரும் பொழுது என்னால் அத்துக்கம் தாங்க முடியவில்லை.

கொடியேனால் நீக்குண்டு கூடுமுற வினரோடும்
படர்வதற்கென் காதலிதான் பரிவுறுங்காற் பெருந்தந்தைக்
கடியாராஞ் சீடரவர் போற்பெரியர் ஆர்த்திந்த
இடமேநில் லெனவொழுகும் நீர்விழியாள் ஏங்கினளே.

அங்ஙனம் ஏக்கமுற்ற நிலைமையோடு என்னை அவள் உறுத்துப் பார்த்த நோக்கமானது, நான் கொடியனு யிருந் தும் நஞ்சு ஊட்டிய அம்பின் றுண்டைப்போல என்னைச் சுடுகின்றதே.

சானுமதி. யாரும் சுயநலம் பாராட்டுவதென்பது இப் படித்தான்; ஏனெனில், இவர் துன்புறுவது கண்டு எனக் குக் களிப்புண்டாகின்றது.

விதூஷகன். ஓ நண்பரே, ஆகாயத்தில் இயங்கும் யாரோ ஒருவன் அவ்வம்மையைக் கொண்டுபோய் விட்டா னென்று கருதுகின்றேன்.

துஷியந்தன். தன் கொழுநனையே தெய்வமாகக்கொண் டாடுமவளை வேறு எவன் தொடுதற்குத் துணிவான்? நின் மேருழியின் பிறப்பிற் கிடமாயுள்ளவள் மேனகை என்று

மகளவப்பட்டிருக்கின்றேன்; அவள் தோழிமாரால் நின்னேருழி கொண்டுபோகப் பட்டாளென்று என் நெஞ்சம் ஐயுறுகின்றது.

சானுமதி. இவை யெல்லாம் மறந்துவிட்டதுதான் வியக்கத் தருவதே யல்லது, நினைவுகூர்வது வியக்கத் தருவதன்று.

விதூஷகன். அப்படியானால், சிலநாட் சென்று நீர் அவ்வம்மையைத் திரும்பவுங் கூடுவீர்.

துஷியந்தன். எங்ஙனம்?

விதூஷகன். தம் மகள் தன் கணவனைப் பிரிந்து வருந்துதலை நெடுநாட் பார்க்கப் பெற்றோர் தாங்கமாட்டார்கள்.

துஷியந்தன். தோழனே,

காரிகை தன்னையான் கலந்திருந்தமை
ஓரில்பொய்த் தோற்றமோ உளத்தின் பேதமோ
சேரிய பிறவியில் திரண்ட நல்வினை
சீரிய பயன்பயந் தொழிந்த செய்கையோ.

இனித் திரும்பா வகையாய் அது மறைந்துவிட்டதே. ஆயினும், என் எண்ணங்கள் மாத்திரம் தலைதெரியாமல் போய்க்கொண்டிருக்கின்றன.

விதூஷகன். அப்படிச் சொல்லாதீர். ஏன், முன் நினையாத ஒரு சேர்க்கையானது, அவசியம் நடக்கவேண்டியிருந்தால் நடந்தே விடுகின்றதென்பதற்கு இந்தக் கணையாழியே ஒரு சான்றாக இருக்கின்றது.

துஷியந்தன். (கணையாழியைப் பார்த்து) ஓ! எளிதிலே அகப்படுதற்கில்லாத இடத்தில் விழுந்துவிட்டமையால் இரங்கத் தக்கதான துர்ப்பாக்கிய வஸ்து இதோ தெரிகின்றது. ஆ ஆழியே!

கெண்டையங் கண்ணினள் கிளிக்க விரலிடங்
கொண்டுநீ சிறிதுநாள் கூடிப் பின்னதை
விண்டமை தெரிந்திடில் விளைவளஞ் சிறிதுறப்
பெண்டிரைப் பிரிந்தவென் பெற்றி ஒத்தியால்.

சானுமதி. மற்றும் வேறொருவன் கையில் அகப்பட்டிருந்தால், இஃது உண்மையிலே மிகுதியும் இரங்கத்தக்கவொன்றாகத்தான் இருக்கும்.

விதூஷகன். நண்பரே, உமது பெயர் பொறிக்கப்பட்ட இம்மோதிரத்தை நீர் அவ்வம்மை கையிலிடுதற்குக் காரணம் யாது?

சானுமதி. இது தெரிந்து கொள்ளுவதற்கு எனக்குண்டான ஆவலே இவனுக்கும் இதனை எழுப்புவிக்கின்றது.

துஷியந்தன். சொல்லுகின்றேன் கேள். நான் அவளைப் பிரியும்பொழுது, என்காதலி "பெருமான் எத்தனை நாட்சென்று எனக்குச் செய்தி யனுப்புவீர்" என்று கண்களில் நீர் ததும்ப நின்று கேட்டாள்.

விதூஷகன். அதன் பிறகு

துஷியந்தன். அப்போது, என் பெயர் செதுக்கப்பட்ட இக்கணையாழியை அவள் விரலிலிட்டு, "ஒவ்வொரு நாளுக்கு ஒவ்வோர் எழுத்தாக இக்கணையாழியிலுள்ள என் பெயரை எண்ணிக்கொண்டுவா; கடைசி எழுத்திற்கு நீ எண்ணவரும் நாளில், என் கண்மணி! நின்னை என் அந்தப்புரத்திற்கு அழைத்துச் செல்லும் பொருட்டு ஒரு தூதுவன் வந்து நிற்பான்" என்று அவளுக்கு விடைகூறினேன். பின், கல்நெஞ்சுடையனான யான் மறதியினால் அவ்வாறு நடக்கத் தவறிவிட்டேன்.

சானுமதி. அந்தோ! இவ்வளவு நன்றாக ஏற்படுத்தப்பட்ட கால வரையும் தவறிப்போயிற்றே!

விதூஷகன். செம்படவனால் அறுத்துத் திறக்கப்பட்ட அச்செவ்வப்பு மீனின் வயிற்றுள் அஃது எப்படி வந்தது?

துஷியந்தன். சசி தீர்த்தத்தை நின் தோழி குனிந்து வணங்குகையில் அஃது அவள் கையினின்றுங் கழன்று கங்கை வெள்ளத்தில் விழுந்துபோயிற்று.

விதூஷகன். அஃது உண்மைதான்.

சானுமதி. இதனாலன்றோ இவ்விராஜருஷி பாவத்திற் கஞ்சிச் சகுந்தலையைத் தான் மணஞ் செய்து கொண்டதைப்பற்றிச் சந்தேகிப்பவ ராயினார். அஃதிருக்கட்டும், இவ்வளவு மிகுந்த காதலிருக்கையில் இதற்கு மோதிரத்தை அடையாளமாக வேண்டியதென்னை? இஃதெப்படி யிருக்கலாம்.

துஷியந்தன். நான் இந்தக் கணையாழியின் மேற்றான் குற்றஞ் சொல்லவேண்டும்.

விதூஷகன். (தனக்குள்) இவர் உன்மத்தங் கொண்டவர்களுடைய வழியிற் போகின்றார்

துஷியந்தன்.

மெல்லிதா யழகிதாய் விளங்குநீள் விரலுடை
அல்லிமென் கையைவிட் டாழ்ந்ததென் னீருளே
புல்லிய அறிவிலாப் பொருளவள் நலம்பெற
வல்லதன் றேழையேன் மயங்கிற் றென்னையோ.

நானே என் கண்மணியை நீக்கியது ஏன்?

விதூஷகன். (தனக்குள்) எப்படி! இவர் தமக்குள்ள காமப்பசியாலென்னையே விழுங்கிவிடுவார்போலிருக்கிறதே!

துஷியந்தன். என் அன்பே! ஏதொரு காரணமுமின்றி உன்னை நீக்கிவிட்டதனாற் பெருந்துயர்கொண்ட இவனுக்கு உன் உருவைக் காட்டி அருள்புரியாயோ.

(சதுரிகை சடுதியில் திரையை விலக்கிக்கொண்டு கையிற் சித்திரபடத்தோடு வருகின்றாள்.)

சதுரிகை. படத்தில் எழுதப்பட்ட இளஅரசி இதோ! (சித்திரபடத்தைக் காட்டுகின்றாள்.)

விதூஷகன். நன்று! நன்று! ஓ நண்பரே! பொருள்களின் நிலைமை இருந்தபடியே வைத்துச் சித்திரித்தஇவ்வழகிய படம் பார்க்கத் தகுந்ததே. எழுதப்பட்ட பொருள்களின் மேடுபள்ள அமைதிகளைப் பார்க்கும்போது என் கண்கள் அவற்றில் தடுக்கி விழுவதுபோ லிருக்கின்றன.

சானுமதி. துகிலிகை பிடித்து ஓவியம் தீட்டுவதில் இவ்விராஜருஷியின் திறமை எவ்வளவு சிறந்ததாக இருக்கின்றது! என் தோழி எனக்கு எதிரில் நிற்கிறதாகவே நினைக்கின்றேன்.

துஷியந்தன். எவ்வெவை நன்றா யில்லையோ அவ்வவற்றைப் படத்தில் சீர்திருத்திச் சிறப்பாய் எழுதுவதுண்டு; ஆனால், என்காதலியின் உருவஅழகோ இதில் மிகச்சிறிதே வரையப்பட் டிருக்கின்றது

சானுமதி. கழி விரக்கத்தினாலே மிகுதிப் படுகின்ற அன்பும் செருக்கற்ற நடையும் உள்ளவிடத்து இங்ஙனம் நினைப்பது இயற்கையே யாகும்.

விதூஷகன். நண்பரே, இங்கே பெருமையிற் சிறந்த மூன்று மகளிர் தோன்றுகின்றார்கள். இவர்கள் எல்லாரும் அழகாகவே யிருக்கின்றனர்; இவருட் சகுந்தலை யார்?

சானுமதி. பயனில்லாத இவன் பார்வை என் தோழியின் பேரெழிலைப் பகுத்தறியக் கூடாதது வாய்வதேயாம்.

துஷியந்தன். நல்லது, நீ யாரை யூகிக்கின்றாய்?

விதூஷகன். இப்போது தான் நீர் பாய்ச்சப்பட்டதனால் பசுந்தளிர் அரும்பிப் பசுத்துத்தோன்றுங் கொழுவிய மாமரத்தின் கீழே நின்றபடியாய்க் கட்டவிழ்த்து விட்டமையால் மேற்செருகிய மலர்கள் உதிரப் பெறுகின்ற கரிய கூந்தலோடும், வியர்வைத் துளிகளோடு கூடிய முகத்தோடும், துவண்ட பச்சிளந் தோள்களோடும் சிறிதே களைப்படைந்த வகையாய் எழுதப்பட்டிருக்கும் இவ்வுருவே சகுந்தலையாகும்; ஏனையோர் அவர் தோழிகள்.

துஷியந்தன். நீ திறமையுள்ளவன்றான். என் காதல் மிகுதியைக்காட்டும் அடையாளத்தை இங்கேபார். வியர்த்த என்விரல்கள் பட்டு அழுந்தினமையால் இதன் ஓரம் அழுக்கடைந்து தோன்றுகின்றது; இதோ கண்ணீர்த்துளி விழுந்தமையால் அவள் கன்னத்தின் மேல்வர்ணம் ஊறித் தோன்றுகின்றது. வசதுரிகே! இவ்விநோத சித்திரம் இன்னும் முற்றும் எழுதப்படவில்லை. நீபோய்த் துகிலிகை எடுத்துவா.

சதுரிகை. ஐயா மாதவியரே, நான் வருமளவும் இச்சித்திர படாத்தைத் தாங்கிக்கொள்ளும்.

துஷியந்தன். நானே பிடித்துக் கொள்ளுகின்றேன். (அப்படியே செய்கின்றன்.) (சேடிபோய்விட்டாள்.)

துஷியந்தன். (பெருமூச்செறிந்து) ஆ நண்பா!

தானேவலிவிலென்பால்வந்தநயலைத்தள்ளிவிட்டு
நானேபடத்திலெழுதுமிந்நங்கைக்குநன்றுசெயல்
மீனேபிறழுப்பெருகுமொராற்றைவிடுத்துவெய்ய
கானேபடர்கின்றபேய்த்தேரைவேட்டல்கடுக்குமன்றே.

விதூஷகன். (தனக்குள்) இங்கே மன்னன் உண்மையாகவே யாற்றைக்கடந்து கானல் நீரைச் சேர்ந்தவராகவே யிருக்கின்றார். (உரக்க) நண்பரே, இன்னும் வேறு என்ன இங்கு எழுதப்படவேண்டும்?

சானுமதி. என்றோழியால் விரும்பப்பட்ட இடங்கள் பலவற்றையும் எழுத நினைத்திருக்கவேண்டும்.

துஷியந்தன். சொல்லுகின்றேன் கேள்.

துணைபுணரன்னம் மணற்பாங்கிருப்பத்
தண்ணென்றொழுகும் நீர்மாலினியும், அதன்
இருகரை மருங்குங் கௌரியை யீன்ற
இமயஞ் சார்ந்த எழிலுடை மான்கள்
அமைதரு தூய பனிபடு குன்றும்,
மரவுரி தூங்கும் விரிகிளை மரநிழல்
கருங்கலைக் கோட்டில் இருங்கண் டேய்க்கும்
வெருவுறு பேடை மானும்
வரைதல் வேண்டினேன் மற்றிது தெரிமோ.

விதூஷகன். (தனக்குள்) நீண்ட தாடியுள்ள சந்நியாசிகள் கூட்டத்தை இந்தச் சித்திரபடத்தில் நிரப்பப் போகிறார் என்று தெரிகின்றேன்.

துஷியந்தன் நண்பா, மேலும், சகுந்தலைக்குச் செய்ய நினைத்த ஓர் அலங்காரத்தை எழுத மறந்துவிட்டோமே.

விதூஷகன். அதென்ன?

சானுமதி. அது வனவாழ்க்கைக்கும் அவளது மெல்லிய வடிவத்திற்கும் இசைந்ததாகத்தா னிருக்கலாம்.

துஷியந்தன். தோழா,

காம்புகாதுசெருகிக் கன்னமேற்றொங்கும்
நரம்புடைச்சிரீடம் நான்வரைந்திலெனால்;
மழைநாள்மதியின் தழைகதிர்புரையும்
தாமரைமென் னூல் காமருகொங்கைகள்
நடுவேவயங்க வடிவெழுதிலனே.

விதூஷகன். தோழரே, தாமரை மலரின் இதழ் போன்ற அழகியகையினால் தமதுமுகத்தை மூடிக்கொண்டு

இந்த அம்மையவர்கள் நடுக்கம் அடைந்தாற்போல நிற்பது ஏன்? (உற்றுநோக்கி) ஆ! இதோ வேகமகனும் பூக்களி னுள்ள தேனைக் கொள்ளைகொண்டு போவானுமான இந்த வண்டல்லவோ அம்மையார் முகத்தில் வந்துவிழுகின்றான்.

துஷியந்தன். மெய்யே, அப்பொல்லாததை ஓட்டிவிடு.

விதூஷகன். தீயோரைத் தண்டிக்கும் நீர்தாம் அதனை ஓட்டக்கூடும்.

துஷியந்தன். நல்லதப்படியே, பூங்கொடிகளால் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும் விருந்தினனே! நீ ஏன் இங்கே வந்து பறந்து கொண்டு வருந்துகின்றாய்?

மணமலரில் வேட்கையொடு மகிழ்பேடை வைகிநீ
அணவுவது கருதித்தேன் பருகாமை அறியாய்.

சானுமதி. அஃது இப்போது ஒருதரம் மரியாதையோடும் வெருட்டப்பட்டது!

விதூஷகன். வெருட்டப்பட்டபோதிலும் இந்தச்சாதி இலேசிலே போகிறதில்லை.

துஷியந்தன். இங்ஙனஞ் சொல்லியும் நீ எனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்தாயில்லை; ஓவண்டே! இப்போது இதனைக்கேள்:

காமவின்பம்றாகருங்காற் கனிந்துநான்மெல்லெனச்சுவைத்த
தோமில்மரத்திற்கிள்ளாத நூமென்றுளிரோமிகப்பழுத்த
காமர்கொவ்வைப்பழமோஎன் கண்ணேயனையாள்கனிந்தவி [தழ்
நீமேற்றொட்டால்முண்டகமாமுகையுட் சிறையாய்நிலையிடு [வேன்.

விதூஷகன். நீர் இவ்வளவு கடுமையான தண்டனை விதித்தபிறகும் அஃது உமக்குப் பயப்படாமலிருக்குமா? (நகைத்துத் தனக்குள்) இவர் உண்மையிலே உன்மத்தனாய்

விட்டார். இவருடைய கூட்டுறவால் நானும் அப்படித்தான் ஆய்விட்டேன். (உரக்க) தோழரே, இஃது ஒருபடமன்றோ!

துஷியந்தன். என்ன, இது படமா?

சானுமதி. எனக்கும் இப்போதுதான் இதுதெரியலாயிற்று. தன்னு லெழுதப்பட்ட உருவத்தையே நெஞ்சிலழுத்தி அனுபவித்துக் கொண்டிருக்கும் இவருக்கு எப்படித்தெரியும்?

துஷியந்தன். நண்பா, நீ என்ன இதில் இப்படித் தலையிட்டுக்கெடுத்தாயே? முழுவதும் அவள் வசப்பட்ட நெஞ்சத்தோடு அவளை என் எதிரிற்கண்டாற்போலப் பார்த்து இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில், நீ எனக்கு இதனை நினைவூட்டி என்காதலியைச் சித்திர படத்தினளவாய் ஆக்கிவிட்டனையே. (கண்ணீர் உதிர்க்கின்றான்.)

சானுமதி. முன்னுக்குப்பின் முரணாயிருக்கின்ற ஒழுக்கத்தோடு கூடின இத்தகைய பிரிவினை அரிதரிது.

துஷியந்தன். ஆ தோழா, இஃதென்ன ஒழிவில்லாத துயரத்தை அனுபவித்துக்கொண் டிருக்கின்றேனே?

விழிதுயிலாமையால் விரைகனவினும்
எழிலினுள் தனை எயப்பெற்றிலேன்
ஒழுகுகண்ணீரினல் உறும்படத்தினும்
பழியறு பாவையைப் பாரக்ககில்லெனே.

சானுமதி. நீர்தள்ளிவிட்டதனல் சகுந்தலை அம்மையார்க்கு உண்டான துயரத்தையெல்லாம் நீர் இப்போது நீக்கிவிட்டீர்.

(சதுரிகை வருகின்றாள்.)

சதுரிகை. வேந்தற்கு வெற்றிசிறக்க! துகிலிகை வைத்த பெட்டகத்தை எடுத்துக்கொண்டு இவ்வழியாய் வந்துகொண் டிருந்தேன்.

துஷியந்தன். அப்புறம் என்னை?

சதுரிகை. அப்போது அவ்வழியே தாளிகையோடு வந்த வசுமதி அரசியார் "நானே இதனை என்பெருமானிடத்திற் சேர்ப்பிக்கின்றேன்" என்று வலிந்து பிடுங்கிக் கொண்டார்.

விதூஷகன். நல்லகாலமாய் நீ தப்பிவந்துவிட்டாயே!

சதுரிகை. அருகிருந்தகிளையில் அரசியாரது மேலாடை மாட்டிக்கொள்ள அதனைத் தாளிகை விடுவித்தெடுத்துக் கொண்டிருக்கையில் நான் மறைவாய் வந்துவிட்டேன்.

துஷியந்தன். தோழா, அரசி வருகின்றாள்; நான் அவளை நன்குமதித்திருத்தலால் அவள் செருக்கடைந்திருக்கின்றாள். இந்தச்சித்திரபடத்தைப் பத்திரமாய் வைத்திரு.

விதூஷகன். 'நீபத்திரமாயிரு' என்று சொல்லும். (சித்திரபடத்தை எடுத்துக்கொண்டு எழுகின்றான்.) அந்தப்புர மகளிருடைய கலகங்களிலிருந்து நீர் தப்பிவந்தபின் மேகபிரதிச்சந்தம் என்னும் அரண்மனையிலிருக்கும் என்னைக் கூப்பிடும். (விரைவாய் நடந்து போய்விட்டான்.)

சானுமதி. தன்னெஞ்சத்தை வேறொருவர்க்கு இடமாய்க்கொடுத்தும், தன் முதன்மனையாளிடம் இவர் நன்கு மதிப்புடையராய் ஒழுகுகின்றார். எனினும் இவர் இவளிடத்து வேண்டாவிருப்புடையராகவே யிருக்கின்றார்.

(பிரதீகாரி கையில் ஒரு லிகிதத்தோடு வருகின்றாள்.)

பிரதீகாரி. வேந்தற்கு வெற்றிசிறக்க!

துஷியந்தன். வேத்திரவதி! நீ வழியில் அரசியைப் பார்க்கவில்லையா?

பிரதீகாரி. ஆம் பார்த்தேன். கையில்நான் இலிகிதத்தோடு வருதலைக்கண்டு அவர்கள் திரும்பிப் போய்விட்டார்கள்.

துஷியந்தன். அரசர்க்குரிய கடமையினைத்தெரிந்திருத்தலால், அரச காரியங்களில் எனக்கு இடைஞ்சல் உண்டாகாவண்ணம் அவள் ஒழுகுகின்ருள்.

பிரதீகாரி. எம்பெருமான், அமைச்சர் பின் வருமாறு வேண்டுகின்ருர்: "பலவகைப்பட்ட வரிவருவாய்க் கணக்குகள் நிரம்பவும் மிகுதியாய் இருத்தல்பற்றி, ஒரே ஒரு வழக்குத்தான் முடிவு செய்யப்பட்டிருக்கின்றது; அதனைத் தாங்கள் இலிகிதத்தில் கண்ணுறுவீர்கள்"

துஷியந்தன். அவ்விலிகிதத்தை இங்கே காட்டு.

(பிரதீகாரி அதனைக் கையிற் கொடுக்கின்றள்.)

துஷியந்தன். என்ன? கடலிற் சென்று வாணிகம் நடத்தும் தனமித்திரன் என்னுஞ் சிறந்த வியாபாரி கப்பலுடைந்து இறந்து போயினுரென்றும், இரக்கப்படத்தக்க அச்செட்டியார்க்குப் பிள்ளையில்லை யென்றும், அதனல் அவர்களஞ்சியத்தில் உள்ள பொருள் முழுதும் அரசனுக்குச் செல்லவேண்டு மென்றும் அமைச்சர் எழுதுகின்ருர். பிள்ளை யில்லாதிருத்தல் உண்மையிலேபரிவுறத்தக்கதொன்றேயாம்! ஏ வேத்திரவதி! பெருமையிற் சிறந்த அச்செட்டியார் பெருஞ் செல்வராதலால் அவர்க்கு மனைவிமார் பலர் இருக்கவேண்டும். அம்மனைவிமாருள் யாரேனும் கருவுற்றிருக்கின்றனரா என்று விசாரணை செய்தல் வேண்டும் எனச்சொல்.

பிரதீகாரி. எம்பெருமான், சாகேதநாட்டு வியாபாரியின் மகளான அவர் மனைவி ஒருத்திக்கு இப்போதுதான் சீமந்தச் சடங்கு நடத்தப்பட்டதாகக் கேள்வி.

துஷியந்தன். நல்லது, கருப்பையிலுள்ள அப்பிள்ளைதான் தந்தை செல்வத்தைப் பெறுதற்கு உரிமையுடையது. நீ போய் இதனை அமைச்சருக்கு அறிவி.

பிரதீஹாரி. தாங்கள் கட்டளையிடும்வண்ணமே. (போகின்றாள்.)

துஷியந்தன். ஏ இங்கே வா.

பிரதீஹாரி. இதோ வந்தேன்.

துஷியந்தன். ஒருவனுக்குப் பிள்ளை யுண்டா இல்லையா என்றுதான் விசாரிப்பானேன்? குடிமக்கள் தம் இனத்தாரில் யாரை இழந்தாலும், துஷியந்தன் பாவமில்லாத வழியில் அவரவர்க்கு அவ்வவ் இனமா யிருப்பானென்று முரசறையச் சொல்.

பிரதீஹாரி. அப்படியே முரசறையச் சொல்லுகிறேன்.

(போய்த் திரும்பிவந்து)

உரியகாலத்திற் பெய்த மழையைப்போலத் தங்கள் அறிவிப்பை மகிழ்ந்து ஏற்றுக் கொண்டார்கள்.

துஷியந்தன். (மிகவும் பெருமூச்சேறிந்து) அந்தோ! முதல்வன் இறந்தபின் ஆதாரமில்லாத குடும்பங்களின் திரவியமானது பிள்ளை யின்மையினாலே எதிரொன்றொருவன்பாற் போய்ச் சேர்கின்றது. புருவம்சத்தின் செல்வ நிலையும் எனக்குப் பின் இங்ஙனந்தான் ஆகப்போகின்றது.

பிரதீஹாரி. தீமை விலகக் கடவது!

துஷியந்தன். தானேவந்த சீரை அவமதித்த என்னைக் கொளுத்தவேண்டும்!

சானுமதி. சந்தேகமின்றி இவர் என்தோழியை நினைந்தே தன்னை நொந்துகொள்ளுகின்றார்

துஷியந்தன். ஏனெனில், பருவகாலத்தில் விதைக்கப்பட்டுப் பெரு விளைச்சலைத் தருவதா யிருக்கின்றநிலத்தைக் கைவிடுதல்போல, அவளிடத்து எனதுதேசசு நாட்டப்பட்

டிருந்தும் என்குடும்பத்திற்குளன்றும் நிலைபெறுயுள்ள என் அறக்கிழத்தியை நான் விலக்கி விட்டேனே!

**சானுமதி.** இப்போது உமது வமிசம் இடையறுது தொடர்ச்சியாய் இருக்கப் போகின்றது.

**சதுரிகை.** (அப்புறமாய்.) வியாபாரச் செட்டியாரைப் பற்றிய செய்தியால் வேந்தன் மிகுந்த துயரம் அடைந்திருக்கிறார். ஆகையால், இவரை ஆற்றுவிக்கும் பொருட்டு நீ போய் மேகப்பிரதிச்சந்த அரண்மனையி லிருக்கும்பெருமை தங்கிய மாதவியரை அழைத்துவா.

**பிரதீகாரி.** நல்லதுசொன்னுய். (அழைக்கப்போயினுள்.)

**துஷியந்தன்.** ஐயோ!

பிள்ளையிலாக் கொடியேனுற் பெயப்பட்ட எண்ணீரைப் பிதிரர்கண்டு, தள்ளாத விதிப்படியே யிவன் பின்னே தருநீரு மெள்ளுங் கூட்டிக், கொள்ளுமிரோ பலி யெனவே கொடுப்பாரா ரெனக்கூறியுகுங்கண்ணீரோ, டள்ளியேயுண் பாரால் பலிபெறுவோர் ஐயமுற லாயிற் றந்தோ! (மூர்ச்சையடைகின்றன்.)

**சதுரிகை.** (துரிதமாய் அரசனைத்தாங்கி) வேந்தர் பெருமானே மனந்தளராதீர்கள்.

**சானுமதி.** ஆ! ஆ! விளக்கிருந்தும் திரைமறைத்தலினுல் இருளிலே கிடந்து இவர் வருந்துகின்றூர். இப்போது இவரை நான் மகிழ்விக்கின்றேன். அல்லது இப்படித்தான் செய்வானேன். இந்திரன் அன்னையார் சகுந்தலையை ஆற்றுவிக்கும்பொழுது "அவிப்பலியைப் பெறவிரும்பித் தேவர்கள் தாமே, தான் விதிப்படியே மணந்துகொண்ட மனையாளைக் கணவன் மகிழ்வோடு ஏற்றுக்கொள்ளும்படி செய்விப்பார்கள்" என்று சொல்லியதைக் கேட்டிருக்கின்றேன். அதுகாறும் காத்திருத்தலே தகுதி. இதற்கு இடையில்

நான்போய் இங்கு நடந்ததைச்சொல்லி என்தோழியை ஆற்றுகின்றேன். (வானில் உயரஎழுந்து போய்விட்டாள்.)

(திரைக்குப்பின்னே.)

ஓ பிராமணனைக் காப்பாற்று! ஓ பிராமணனைக் காப்பாற்று!

துஷியந்தன். (உணர்வுற்றெழுந்து; உற்றுக்கேட்டு) ஓ! இந்த ஓலக்குரல் மாதவியனுடையதுபோல் தோன்றுகின்றதே. யார் அங்கே?

(பிரதீகாரிவந்து)

பிரதீகாரி. (விரைவாய்) அண்ணலே, ஆபத்திலகப்பட்டுக்கொண்ட தங்கள் நண்பரைக் காப்பாற்றுங்கள்.

துஷியந்தன். அவனை வருத்துகின்றவன் யாரடா?

பிரதீகாரி. கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒருதீய பேயானது அவரைப் பிடித்து மேகப்பிரதிச்சந்த அரண்மனையின் உச்சித்தளத்தின்மேற் கொண்டுபோகிறது.

துஷியந்தன். இவ்வாறு நடக்கவிடப்படாது. என் இருப்பிடத்திலும் தீயபேய்கள் இயங்குகின்றனவா! இங்ஙனந்தான் சொல்வானேன். ஒருவன் தான் நாடோறும் அலட்சியத்தினால் செய்கின்ற குற்றங்களைத் தெரிந்துகொள்ளுதலே கூடாதபோது, என்குடிமக்களில் யார் எவ்வழியிற் செல்கின்றார்கள் என்று முற்றும் தெரிந்துகொள்ளுதல் எவ்வாறு கூடும்?

(திரைக்குப்பின்னே.)

ஓ நண்பரே! உதவிசெய்யும்! உதவிசெய்யும்!

துஷியந்தன். (விரைந்துசென்று) நண்பா, அஞ்சாதே! அஞ்சாதே!

(திரைக்குப்பின்னே)

(முன்சொன்னதையே திரும்பச்சொல்லி) நான் எப்படிப் பயப்படாமலிருப்பேன்? இங்கே யாரோ ஒருவன் என் கழுத்தைப் பின்னே வளைத்துக் கருப்பங் கழியைப்போல் மூன்று துண்டாய் முறிக்கிறானே.

துஷியந்தன். (சுற்றிப்பார்த்து) வில்லை எடுத்துவா.

(ஒரு யவனப்பெண் கையில் வில்லெடுத்துக்கொண்டு வருகின்றாள்.)

யவனப்பெண். இதோ, எம்பெருமான், கையுறையோடு வில்.

(அரசன் அம்புடன் வில்லை வாங்குகின்றான்.)

(திரைக்குப்பின்னே.)

இதோ, உன்கழுத்திலுள்ள புது இரத்தத்தைப் பருகுதற்காகப் புலி ஒருவிலங்கைக் கொல்லுமாறுபோல நான் உன்னைக் கொல்லுகின்றேன். வருந்துகின்றவர்களின் அச்சத்தைப் போக்கும்பொருட்டு வில்லைக் கையிலேந்துகின்ற துஷியந்தன் இப்போது நின்னைக் காக்கட்டும்!

துஷியந்தன். (சினத்தோடு) என்ன, இவன் என்பெயரைச் சொல்லுகின்றான். அடே பிணந்தின்கின்றவனே நில், நில். இனி நீ உயிர்பிழைத்திராய்! (வில்லைநாணேற்றி) வேத்திரவதி, மேல்மாளிகைக்கு வழிகாட்டு.

பிரதீகாரி. பெருமான் இவ்வழியே, இவ்வழியே வாருங்கள்.

(எல்லாரும் துரிதமாய்ப் போகின்றார்கள்.)

துஷியந்தன். (சுற்றிப்பார்த்து) இங்கே யாரையுங்காணேமே.

(திரைக்குப்பின்னே)

ஐயோ! ஐயோ! நான் உம்மைப் பார்க்கின்றேனே. நானிருப்பது உமக்குத் தெரியவில்லையே. பூனையாற் பிடிக்கப்பட்ட சுண்டெலிபோல என் உயிரில் எனக்கு நம்பிக்கையில்லாமல் போகின்றதே!

துஷியந்தன். ஏ திரஸ்கரணி வித்தையாற் செருக்குற் றவனே! எனது கணை உன்னைப் பார்க்கப் போகின்றது. கொல்லப்படுதற்கு உரிய உன்னைக் கொல்லும்பொருட்டும், காக்கப் படுதற்குரிய பிராமணனைக் காக்கும்பொருட்டும் இதோ நான் கணைதொடுக்கின்றேன். அன்னப்பறவை யானது பாலையுண்டு அதனோடுகலந்த நீரை ஒழிக்கின்றது கண்டையா! (அம்பைக் குறியிடுகின்றான்.)

(பிறகு விதூஷகனை விட்டுவிட்டு மாதலியும் பின்னே விதூஷகனும் வருகின்றார்கள்.)

மாதலி. தேவேந்திரன் உம்முடைய அம்புகளுக்கு இலக்காக அசுரர்களை ஏற்படுத்தி யிருக்கின்றார். ஆகையால், அவர்களை நோக்கி இவ்வில்லை வளைப்பீராக. நண்பர்கள் மீது சான்றோருடைய அருள் நோக்கம் படுதல் வேண்டுமே யல்லது, அச்சந்தரும் அம்புகள் சென்று படலாகாதே.

துஷியந்தன். (அம்பைவில்லினின்றும் எடுத்து) ஓ! இந்திரன் சாரதி மாதலியா, உங்கள் வருகை நன்றாகுக.

விதூஷகன். வேள்விப் பசுவைக் கொல்லுதல்போல என்னைக் கொல்லவந்த இவரை அவர் நல்வரவாக ஏற்கின்றாரே!

மாதலி. (புன்சிரிப்போடு) நெடுநாள் வாழக்கடவீர்! தேவேந்திரன் என்னை உம்மிடத்தில் ஏன் அனுப்பினானென்பதைக் கேளும்.

துஷியந்தன். அவ்வாறே சித்தமா யிருக்கின்றேன்.

மாதலி. காலநேமி என்னும் அரக்கர் வகுப்பைச் சேர்ந்த துர்ச்சயர் என்னும் ஒருகூட்டத்தார் இருக்கின்றனர்.

துஷியந்தன். முன் ஒருகால் நாரதர் இதைப்பற்றிச் சொல்லக் கேட்டிருக்கின்றேன்.

மாதலி. உமக்கு நண்பரான தேவேந்திரனுலும் அவ்வரக்கர் கூட்டம் வெல்லக்கூடாததா யிருத்தலின், நீர் தாம் போரில் தலைமையாகச்சென்று அவர்களை அழிக்க வல்லீரென்று முடிவுசெய்யப்பட் டிருக்கின்றது. சூரியனுலும் அழிக்கக்கூடாத இராக்காலத் திருளைச் சந்திரனன்றோ துரத்துகின்றது. ஆதலால், நீர் முன்னமே படைக்கல மேந்தி நிற்றலால் இவ்விந்திர இரதத்தில் ஏறிக்கொண்டு வெற்றி கொள்ள இப்போதே புறப்படும்.

துஷியந்தன். இந்திரன் இவ்வளவு என்னைப் பெருமைப்படுத்தியதற்காக நான் கடமைப்பட் டிருக்கின்றேன். இனி மாதவியனை நீங்கள் அங்ஙனம் நடத்திய தென்னை?

மாதலி. அதனையும் சொல்லுகின்றேன். சிரஞ்சீவியான நீர் ஏதோ ஒருகாரணத்தால் மனக்குழப்பங்கொண்டு கவலையா யிருப்பது கண்டேன். உமக்குக் கோபமூட்டுவதற்கே நான் அங்ஙனஞ்செய்தேன். ஏனெனில், விறகை நெரித்தாலன்றோ அனல் கொழுந்துவிட்டெரிகின்றது; துன்பஞ் செய்தாலன்றோ பாம்பு படத்தைவிரிக்கின்றது. பொதுவாய் எந்தப்பிராணியும் கோபமூட்டினபோதுதான் தன் ஆற்றலை வெளிப்படுத்துகின்றது.

துஷியந்தன். தாங்கள் செய்தது பொருத்தமே. (அப்புறமாய்) நண்பா, வானுலகத்திற் கிறைவனுன தேவேந்திரன் இட்ட கட்டளையை மீறலாகாது. ஆகையால், இச் செய்தியைத் தெரிவித்துப் பிசுனரென்னும் அமைச்சருக்கு இதனைச்சொல் "சிலநாள், தங்கள் அறிவினுல் மாத்திரமே

குடிகளைப் பாதுகாத்துவரல் வேண்டும்; நாணேற்றிய இவ் வில்லானது வேறு கடமையைச் செய்யப்போகின்றது."

விதூஷகன். தாங்கள் கட்டளையிடும் வண்ணமே.

(போய்விடுகின்றான்.)

மாதலி. நெடுநாள் வாழ்வீர்! இவ்வழியே வருக.

(அரசன் இரதத்தின்மே லேறுகின்றான்.)

(எல்லாரும் போய்விட்டார்கள்.)

ஆறாம் வகுப்பு முடிந்தது.

---



## ஏழாம் வகுப்பு.

---

களம்: விண்வழி.

(இரதத்திலிருந்து வண்ணமாய்த் துஷியந்தனும் மாதலியும் வருகின்றனர்.)

துஷியந்தன். ஐயமாதலி, தேவேந்திரன் இட்ட கட்டளையை நிறைவேற்றினும், அவர் எனக்கென்றே செய்த பெருமைக்கு நான் அவர்க்கு ஒன்றும் உதவி செய்ததாக நினைக்கவில்லை.

மாதலி. (புன்சிரிப்போடு) நீடுவாழ்வீர்! நீங்கள் இருவிரும் திருத்தி யடைந்தீர்களில்லை. ஏனெனில், அவர் உமக்குச் செய்த பெருமையை நினைந்து நீர் அவர்க்குச் செய்த உதவியை ஒரு பொருட்டாக எண்ணவில்லை. அவரும் உமது பேராண்மையை வியந்து உமக்கென்றே செய்த உபசாரங்களைப் போதுமென்று கருதவில்லை.

துஷியந்தன். அப்படிச் சொல்லாதீர்கள். எனக்கு அவர் விடைதரும் போது செய்த உபசாரங்கள் யான் எதிர்பாராதனவாகும். ஏனென்றால் தேவர்கட்கு எதிரில் அவர் தாமிருந்த அரியணையிற் பாதி யானிருக்கக் கொடுத்ததுமல்லாமல், தம் மகன் சயந்தன் தனக்கு இத்தகைய சிறப்பு எய்துமா என்று ஆசைகொண் டிருத்தலைப்பார்த்து நகைத்துக் கொண்டே தம் மார்பில் உரிஞ்சிய பரிமளசந்தனம் பட்ட மந்தாரமாலையை என் கழுத்தி லணிந்தனரே.

மாதலி. தேவேந்திரன் கையிலிருந்து நீர் பெறத் தகாதது உண்மையில் யாது உளது? இந்திரன் சுகமாயிருக்க, முன்பு நரசிங்கத்தினுடைய நகங்களும், இப்போது

கணுக்குறுகின உம்முடைய அம்புகளும் அல்லவோ வானுலகத்தில் அரக்க ரென்னும் முட்களைக் களைந்தெறிந்தன.

துஷியந்தன். இதில் இந்திரனது பெருமையே உண்மையிற் புகழற்பாலது; ஏவலாளர் பெரிய காரியங்களிற் புகுந்து வெற்றிபெறுவ தெல்லாம் எசமானனது நன்கு மதிப்பால் உண்டாயின வென்றே அறிமின்! ஆயிரங் கதிர்களோடு கூடி விளங்கும் சூரியன் தனது தேர் நுகத்தின் முன்னேவையானுயின் அருணன் தானே இருளை அழிக்க வல்லனுவனு ?

மாதலி. இது மிகவும் பொருத்தந்தான். (சிறிதுதூரம் கடந்து சென்று) நீடுவாழ்வீர்! இதோ சுவர்க்க நாட்டில் உமது புகழ் விளங்குதலைப் பார்மின்! இங்கே தேவர்கள் உம்முடைய வெற்றித் திறங்களைப் பாடுதற்குஇசைவான பொருள் நிறைந்த பாட்டாகப் பாடித், தேவமாதர் அணிந்து மிஞ்சிய குங்குமம் முதலியவற்றல் கற்பக விருட்சத்தால் தரப்பட்ட படாத்திலே எழுதி யிருக்கின்றனர்.

துஷியந்தன். ஐயமாதலி, நேற்று நான் அரக்கரோடு போர் புரிய எழுந்த அவாவோடு சென்றமையால் சுவர்க்க நாட்டின் இடங்களை வழியிற் கவனித்திலேன். இப்போது எந்த வாயுமண்டிலத்தில் வந்திருக்கின்றோம் ?

மாதலி. மூன்று பிரிவாய்ச் செல்லும் ஆகாய கங்கையையுடையதும், இரஸ்மிகளைப் பிரித்துவிட்டு நட்சத்திர மண்டிலங்களை இயக்குவதும், திருமாலின் இரண்டாமடி பட்டமையால் எல்லாக் குற்றங்களும் நீங்கப்பெற்றதுமான இது பரிவகம் என்னும் வாயுமண்டில மென்று சொல்லப் படும்.

துஷியந்தன். ஐயா மாதலி, ஆதலினுற்றான் அகக்கருவி புறக்கருவிகளோடு கூடிய என் உயிரானது அமைதி

யுற்று இன்பம் எய்துகின்றது. (சக்கரங்களைப் பார்த்து) நாம் இப்போது மேக மண்டிலத்தில் இறங்கிவிட்டோம் என்று நம்புகின்றேன்.

மாதலி. அஃதெப்படித் தெரிகின்றது?

துஷியந்தன். சாதகப்புட்கள் ஆர்க்கால்களி னிடையே நுழைந்து செல்கின்றமையாலும், குதிரைகள்மின்னற் கொடியினால் மினுமினு வென்று விளங்குதலாலும், சக்கர விளிம்புகள் மழைத்துளிகளால் நனைந்திருத்தலாலும் உம்முடைய தேர் சூல் கொண்ட மேகமண்டில வழியாய்ச் செல்கின்ற தென்பது புலப்படுகின்றது.

மாதலி. இன்னும் ஒரு கணத்தில் நீர் ஆட்சி புரியும் நிலவுலகத்திற்குச் செல்வீர்.

துஷியந்தன். (கீழேபார்த்து). தேர் விரைவாய் இறங்குதலால் மக்களுலகமானது வியக்கத்தக்க தோற்றமுடைத்தாய்த் தோன்றுகின்றது.

ஓங்குவரை மேலிருந் தாங்கிழிவதுபோல்
ஆன்ற நிலவுலகந் தோன்றுவது காண்மோ;
உயர்பெரு மரங்கள் வியன்கிளை தோற்றிச்
செழுந்தழைமறைப்பினின்றெழிந்ததூஉங்காண்மோ;
நன்குபுல னாகா இன்புன வியாறுகள்
அகன்றுநனி கிடத்தலிற் றெளிந்துவிளங்குறுமே;
இவ்வியல்பதனால் எழில் செழூஉ மிவ்வுல
கியாரோ வொருவன் எழச்செய்
திங்கென்பக்கல் இயைப்பது போன்மே.

மாதலி. மிகவும் நன்றாய் வருணித்துக் கூறினீர்! (வியப்போடு பார்த்து) ஆ!, நிலவுலகம் எவ்வளவு மிக்க அழகினதாய்த் தோன்றுகின்றது!

துஷியந்தன். ஐயா மாதலி,

மாலைக் காலத்து மங்கொளி மருங்கிற்
புயலின் போலப் பொருந்தித் தெளிபொன்
உருகவிட்டாலென மருவித்தோன்றிக்
குணகடற் குடகடற் குளித்துக் கிடக்கும்
வளஞ்சா லிம்மலை யாதோ வுரைமோ.

மாதலி. நீடு வாழ்வீர்! தவம் இயற்றுவோர் தவப் பயன் பெறுதற்கு இடமா யுள்ளதும், கிம்புருடர் வசிக்கப் பெற்றதுமான இம்மலை ஏமகூடம் என்னும்பெயருடையது. நான்முகக் கடவுளின் புதல்வரான மரீசிக்குப் பிறந்து தேவரையும் அசுரரையும் தோற்றுவித்தவரான காசியபர் தம் மனைவியோடும் இதோ தவம் இயற்றுதலைப் பார்மின்!

துஷியந்தன். அவ்வாறாயின், தூயோரை வழிபடாது செல்லலாகாது. அத்துறவோரை வலம் வந்துபோக விரும்புகின்றேன்.

மாதலி. நல்ல ஏற்பாடுதான். இதோ கீழ் இறங்கி விட்டோம்.

துஷியந்தன். (வியப்போடு) சக்கர விளிம்புகள் ஓசையுண்டாக்கவில்லை, புழுதியும் மேல்எழும்புவதாகத் தோன்றவில்லை; அசைதலில்லாத உமது தேர் கீழ் இறங்கினபோதிலும் நிலத்தைத் தொடாது நிற்றலால் அவ்வாறுஇறங்கினதாகத் தோன்றவில்லை.

மாதலி. நீடுவாழ்வீர்! உமக்கும் தேவேந்திரனுக்கும் உள்ள வேறுபாடு இவ்வளவுதான்.

துஷியந்தன். ஐயா மாதலி, மாரீசருடைய துறவாசிரமம் யாங்குள்ளது?

மாதலி. (கையாற் சுட்டிக்காட்டி). கறையான் புற்றில் பாதி மறைந்த வடிவத்தோடும், பாம்புரிகள் ஒட்டிக்கொண்

டுள்ள மார்போடும், பழங்கொடிகளின் விழுதுகள் வளைய மாகச் சுற்றிக்கொண் டிருக்குங் கழுத்தோடும், தோள் வரையில் தொங்கிக்கொண் டிருப்பதும் பறவைக் கூடுகள் நிரம்பப் பெற்றதுமான சடைமுடியு முடையராய்ச் சூரிய விம்பத்தைப் பார்த்த வண்ணமாய் அடிமரம்போல் அசை யாமல் நின்றுகொண்டு அதோ தவம்புரியும் அவ்விருடி யுள்ள இடந்தான் அது!

துஷியந்தன். செய்தற்கரிய தவத்தைப் புரியும் அவர் க்கு வந்தனம்!

மாதலி. (குதிரைக்கலினங்களை இழுத்துப்பிடித்து) வேந்தர் பெருமானே! அதிதியால் வளர்க்கப்பட்ட மந்தார மரங்கள் நிறைந்த காசியபர் ஆசிரமத்திற்கு இப்போது வந்துவிட் டோம்.

துஷியந்தன். துறக்க நாட்டினும் இஃது இன்பமு டைத்தா யிருக்கின்றதே. இப்போது நான் தேவாமிழ்தம் நிரம்பிய வாவியில் முழுகினவன்போ லாயினேன்.

மாதலி. (தேரைநிறுத்தி) நீடுவாழ்வீர் இறங்கலாம்.

துஷியந்தன். (கீழ்இறங்கி) நீர் யாது செய்யப் போ கின்றீர்?

மாதலி. தேர்நிலையாய் நிற்கும்படிசெய்துவிட்டேன். நானும் கீழ் இறங்குகின்றேன். (அவ்வாறே செய்து) நீடு வாழ்வீர் இவ்வழியே இவ்வழியே வருக. (நடந்து சென்று) மாட்சி நிறைந்த முனிவ ரிருக்குந் தவ இடங்களை நீர் காணலாம்.

துஷியந்தன். உண்மையிலே நான் வியப்போடு பார் த்து வருகின்றேன்!

வேட்பன தருஉங் கற்பகம் பொதுளிய
அடவியி லிருந்தும் மற்றிவர் ஆர்வது

நடைபெறுந் தூயவளியே; முடவிதழ்ப்
பொற்றாமரையின் நற்றாதுகுதலிற்
பழுப்புருத் தோற்றும் விழுத்தடநீரே
பொழுதுமாறிவர் முழுகுநீம் புனலே;
வீழ்ந்தொருகுறியில் ஆழ்ந்திவரிருப்பதுங்
கணிப்புறலாகா மணித்தலமீதே;
அரம்பைமாதரார் மருங்குறப்பெற்றும்
ஐம்பொறி யடக்குமிவர் மொய்ம்புமிகப்பெரிதே;
இத்தகுசிறப்பின் இந் நற்றவருறையுள்
ஏனைமுனிவரும் விழைவுற்
றுணுது நோற்கும் அருஞ்சிறப்புடைத்தே.

மாதலி. பெரியோருடைய அவாவானது மேன்மேல் உயர்ந்த பொருளை நாடிச் செல்கின்றது. (நடந்துபோய் வானைநோக்கி) ஓ முதுமை மிகுந்த சாகலியரே! மாட்சி நிறைந்த மாரீசர் யாது செய்துகொண் டிருக்கின்றார்? யாது சொல்லுகின்றாய்? இல்லறக் கிழத்தியின் கடமைகளைப் பற்றித் தாட்சாயணி கேட்ட வினைக்களுக்கு அவ்வம்மையார்க்கும் மற்ற முனிவர் மனைவிமார்க்கும் விளக்கி விடை சொல்லிக்கொண் டிருக்கின்றார் என்று சொல்கின்றீர்?

துஷியந்தன். (உற்றுக்கேட்டு). ஓ! இவ்விஷயம் விவரிக்கப்படும் இச்சமயத்தில் இடையே செல்லலாகாது.

மாதலி. (அரசனைப் பார்த்து.) நான் தேவேந்திரன் தந்தையினிடத்துச் சமயம் பார்த்து நும் வரவை அறிவிக்கும் வரையில் நீர் சிறிதுநேரம் இவ்வசோக மரத்தடியின் கீழ் இருக்கலாம்.

துஷியந்தன். தங்கள் விருப்பப்படியே, (இருக்கின்றன்)

(மாதலி போய்விட்டார்.)

**துஷ்யந்தன்.** (நல் நிமித்தத்தைக் கண்டு) ஏ புயமே! நீ ஏன் துடிக்கின்றாய்? என் விருப்பம் நிறைவேறுமென்று எனக்கு நம்பிக்கை யில்லை; ஏனெனில், ஒருமுறை விலக்கப் பட்ட ஓர் இன்பமானது பின்பு திரும்பிவருதல் மிகஅரிது.

(திரைக்குப் பின்னே.)

அப்படித் துடுக்குத்தனம் செய்யாதே, செய்யாதே. என்ன, தன் சுபாவத்தைக் காட்டத்தொடங்கிவிட்டானே.

**துஷியந்தன்.** (உற்றுக்கேட்டு) இது துடுக்குத்தனஞ் செய்தற்குரிய இடம் அன்றே. இங்கே யார் இவ்வகை யாகக் கண்டிக்கப் படுகின்றது? (ஓசைவரும்வழியே வியப் போடுபார்த்து) ஆ! தாயின் முலைக்காம்பைப் பற்றிப் பாதி குடித்த சிங்கக்குட்டியை விரிந்து கிடக்கும் அதன் பிடரி மயிர் கசங்கும்படி பிடித்துக்கொண்டு விளையாடுவதற்காக அதன் தாயினின்றும் வலிந்து இழுக்கின்றவனும், பிள்ளை கட்கில்லாத வலிமையுடையவனும், துறவி மகளிரால் பின் றொடரப்பட்டு வருபவனுமான இச்சிறுவன் யார்?

(மேற்சொன்ன வண்ணம் துறவிமகளிரோடும் ஒரு சிங்கக் குட்டியை இழுத்துக்கொண்டு ஒரு சிறுன் வருகின்றனன்.)

**சிறுவன்.** ஏ சிங்கக் குட்டியே! வாயைத்திற, நான் உன் பற்களை எண்ணுகின்றேன்.

**முதல்மாது.** அடே பட்டிப்பையா! எங்கள் பிள்ளை யைப்போல் நாங்கள் வளர்த்துவரும் இந்தப் பிராணியை ஏன் வருத்துகின்றாய்? வரவர உனது பட்டித்தனம் மிகு திப் படுகின்றதே. உனக்குச் சர்வதமனன் (எல்லாவற்றை யும் அடக்கி யாள்பவன்) என்று துறவிகள் பெயர் கொடுத் தது பொருத்தமாகத்தா னிருக்கின்றது.

துஷியந்தன். என்மகனைப்போல இச்சிறுவனை ஏன் என் மனம்விழைவுறுகின்றது? எனக்குப் பிள்ளைப்பேறு இல்லாமையினால் இவ்வாறு அன்புண்டாகின்றதுபோலும்!

இரண்டாம் மாதர். அதன் குட்டியை நீவிடாவிட்டால் இதன் தாய் மெய்யாகவே உன்மேற்பாயும்.

சிறுவன். ஓ! அம்மா! நான் நிரம்பத்தான் பயப்படுகிறேன்! (கீழ் உதட்டைப் பிதுக்குகின்றான்.)

துஷியந்தன். கொழுந்துவிட்டெரிகிறதற்கு விறகை நாடும் நெருப்பானது சிறு தீப்பொறியின் நிலையிலிருத்தல் போல, இப்பையன் ஏதோ ஒரு சிறந்த தேசசின் வித்துப்போற் காணப்படுகின்றான்.

முதல்மாதர் குழந்தாய்! இந்தச் சிங்கக் குட்டியை விட்டுவிடு. உனக்கு வேறொரு விளையாட்டுக் கருவி கொண்டு வந்து தருகிறேன்.

சிறுவன். அஃதெங்கே யிருக்கின்றது? அதைக் கொடு. (கையை நீட்டுகின்றான்.)

துஷியந்தன். என்ன! இவன் மன்னர்மன்னற் குரிய அடையாளம் தாங்கப்பெற் றிருக்கின்றான். ஏனெனில், இவன் தான் வேண்டியபொருளைக் கேட்டுக் கையை நீட்டுகையில், சிவந்து விளங்கும் விடியற்காலத்தில் அலர்ந்த ஒரு தனித் தாமரை மலரின் செவ்விதழ்களின்நடுவி லிடைவெளி தோன்றாமைபோல இவன் கை விரல்கள் நெருங்கிப் பின்னலுற்றுப் பொலிகின்றன.

இரண்டாம்மாதர். சுவரதே, வெறுஞ் சொல்லால் இவனைத் தடுக்கமுடியாது. நீ போய், முனிவர் மகனான மார்க்கண்டேய னுடையதும் பலநிறந் தீட்டப்பட்டதுமான களி

மண் மயில் என் இல்லத்தில் இருக்கிறது அதனை எடுத்து வந்து இவனுக்குக் கொடு.

முதல்மாதர். அப்படியே. (போய்விட்டாள்.)

சிறுவன். அதுவரையில் இதனோடு தானே விளையாடிக்கொண் டிருக்கிறேன். (துறவி மகளைப் பார்த்து நகைக்கின்றன்.)

துஷியந்தன். துடுக்குத்தனமுள்ள இந்தச் சிறுவனிடத்தில் எனக்கு மிகவும் ஆசை உண்டாகின்றது. (பெருமூச்செறிந்து) காரணமின்றி நகைக்கும்பொழுது சிறிதேதோன்றும் அரும்புபோலும் பற்களோடும், பேச முயல்கின்ற இனிய மழலைச் சொற்களோடும் மடிமீதிருக்க வருகின்ற தம் புதல்வர் மேலுள்ள புழுதி தம்மேற் படியப் பெறுகின்றவர்களே பாக்கியவான்கள்!

இரண்டாம்மாதர். இவன் நான் சொல்லுகிறதைக்கேட்கின்றானில்லையே. (தன் பக்கமாய்ப் பார்த்து) அங்கே முனிவர் மகன் யார்? (அரசனைப்பார்த்து) ஐயா, தயைசெய்து இங்கே வந்து, பிடுங்கக் கூடாதபடி இந்தச் சிங்கக் குட்டியைக் கசக்கி விளையாடும் இவன் கையினின்றும் இதனை விடுவியுங்கள்.

துஷியந்தன். (புன் சிரிப்போடு அருகிற்சென்று) ஓ முனிவர் மகனே, இச்சிறு பருவத்திலேயே இத்துறவாசிரமத்திற்குப் பொருந்தாத வண்ணம் நடந்து, பிராணிகளுக்கு நிழலைத் தருதற்கு இனிதான சந்தன மரத்தைக் கரும்பாம்புக் குட்டியானது பயன்பட வொட்டாமல் கெடுத்தல்போலச் சத்துவகுணப் பழக்கத்திற்கு இசைந்ததானபொறுமை ஒழுக்கத்தைக் கெடுத்து விடுகின்றனையே?

இரண்டாம்மாதர். ஐயா, இவன் உண்மையில் முனிவர் மகன் அல்லன்.

துஷியந்தன். இவன் உருவத்திற்குத்தக்க செய்கையே இதனைப் புலப்படுத்துகின்றது. ஆனால், இவனிருக்கு மிடத்தினால் நாம் அவ்வாறு நினைக்கும்படி யாயிற்று. (அம்மாதர் வேண்டியபடியே சிங்கக்குட்டியை விடுவிக்கும்போது அச்சிறுவனுடம்பு தன்மேற்பட ஆனந்தம் எய்தித் தனக்குள்) இன்னனென்று தெரியாத ஒருவன் குடும்பத்திற் பிறந்த இப்பிள்ளையின் அங்கங்கள் என்மேற் படுதன் மாத்திரையால் எனக்கு இவ்வளவு ஆனந்தம் விளைவதாயின், எவனுடம்பினின்று இவன் தோன்றினனோ அந்தப் பாக்கியவான் உள்ளத்திற்கு இவன் எவ்வளவானந்தத்தைத் தருவான்!

இரண்டாம்மாதர். (இருவரையும்பார்த்து) ஆச்சரியம்! ஆச்சரியம்!

துஷியந்தன். அஃதென்னம்மா?

இரண்டாம்மாதர். உமதுருவம் இச்சிறுவனுருவத்தோடு ஒத்திருப்பதையும், நீர் இவனை முன் அறியாதிருந்தும் உமக்கு இவன் அடங்கி யிருத்தலையுங் கண்டு எனக்கு வியப்புண்டாயிற்று.

துஷியந்தன். (அச்சிறுவனைத் தழுவிக்கொண்டு) அம்மா, இவன் முனிவர் மகன் அல்லனாயின், பின் இவன் குலத்தின் பெயர் யாது?

இரண்டாம்மாதர். புரு வமிசம்.

துஷியந்தன். (தனக்குள்) என்ன, என்னைப்போல இவனும் அதே வமிசத்திற்கு உரியவனோ? இதனாலேதான் இவ்வம்மையார் இவன் என்னை ஒத்திருக்கின்றானென்று நினைத்தார். (உரக்க) புருவமிசத்திற் பிறந்தவர்கள் இதனை ஒரு குடும்ப விரதமாக அனுட்டித்து வருகின்றார்கள். இந்நில வுலகத்தைப் பரிபாலித்தற்பொருட்டுச் சுண்ணந் தீற்றி

வெள்ளிதாய் விளங்கும் அரண்மனைகளை அவர்கள் முதலில் வசிக்குமிடமாய்க்கொண்டு, பின் தம் அன்பிற் சிறந்த மனைவிமார் பின் றொடர்ந்து வந்து பணிவிடைசெய்ய மரத்தின் கீழ் நிலத்தை இருப்பிடமாகக் கொள்கின்றனர். ஆயினும், இது மனிதர் தம் வலிமையால் வரக்கூடிய இடம் அன்றே.

இரண்டாம்மாதர். தாங்கள் சொல்லுவது உண்மையே. இந்தச் சிறுவனுக்குத் தாயார் ஓர் அரம்பை மாதரின் உறவால் தேவர்க்குத்தந்தையான காசியபர் ஆசிரமமானஇதன் கண் இவனை ஈன்றனள்.

துஷியந்தன். (தனக்குள்) ஆ! மறுபடியும் நான்ஆசைப் படுவதற்கு வழி ஏற்படுகின்றது! (உரக்க) எந்தப் பெயர் கொண்ட இராஜருஷியின் மனைவியார் அந்த அம்மை?

இரண்டாம்மாதர். தன் அறக்கிழத்தியான மனையாளை நீக்கிவிட்ட அக்கொடியவன் பெயரை யார் தான் சொல்ல நினைப்பார்?

துஷியந்தன். (தனக்குள்) இக்கதை என்னையே சுட்டுகின்றதா யிருக்கின்றதே. இப்பிள்ளையின் தாய் பெயர் யாதென்று கேட்கட்டுமா? அன்றி அங்ஙனந் தான் பிறன் மனையாளைப் பற்றி உசாவுவது நேர்மையன்று.

(களிமண் மயிலைக் கையிலேடுத்துக் கொண்டு முதல் துறவி மகள் வருகின்றள்)

முதல்மாதர். சர்வதமனா, இச் சகுந்தலா வண்யத்தைப் பார் (இப்பறவையின் அழகைப்பார்.)

சிறுவன். (சுற்றிப்பார்த்து) என் அம்மா எங்கே?

இருவரும். தன் அன்னைமேல் உள்ள ஆவலால், சொல் ஒற்றுமையுள்ள இப்பெயரைக் கேட்டு ஏமாந்து போனான்.

இரண்டாம்மாதர். குழந்தாய், இந்தக் களிமண் மயிலின் அழகைப் பார் என்றல்லவோ உனக்குச் சொன்னோம்.

துஷியந்தன். (அப்புறமாய்) இவன் அன்னை பெயர் 'சகுந்தலை'யா ? ஆனால், ஒரே தன்மையான பல பெயர்களும் வழங்குகின்றன. இந்த வெறும் பெயர் கானல் நீரைப் போலக் கடைசியில் என்னை ஏமாற்றி விடுமோ ?

சிறுவன். அம்மா, இந்த அழகான மயில் எனக்குப் பிடித்திருக்கிறது. (அவ்விளையாட்டுக் கருவியை எடுத்துக் கொள்ளுகிறான்.)

முதல்மாதர். (மனக்குழப்பத்தோடு பார்த்து) ஓ ! இவன் மணிக்கட்டில் இரட்டையாகக் கட்டியிருந்தகரண்டகத்தைக் காணோமே.

துஷியந்தன். அஞ்ச வேண்டாம். இவன் சிங்கக்குட்டியைப் பிடித்துக் கசக்கிக்கொண்டிருக்கையில் அது நழுவி விழுந்துவிட்டது. (அதனை எடுக்க முயல்கின்றான்.)

இருவரும். அதனை எடுக்கவேண்டாம், எடுக்கவேண்டாம். என்ன! இவர் அதனை எடுத்துவிட்டாரே! (கைகளை மாரில் வைத்துக்கொண்டு ஒருவரை ஒருவர் வியப்போடு பார்க்கின்றனர்.)

துஷியந்தன். நம்மை ஏன் தடுத்தீர்கள் ?

முதல்மாதர். வேந்தனே கேளுங்கள். இஃது அபராஜிதை எனப் பெயர்பெறும் ஒரு பூண்டு. சாதகன்மம் பண்ணுகையில் தேவனான மாரீச முனிவர் இவனுக்கு இதை நல்கினார். இது கீழே விழுந்து விட்டால் இவனும் இவன் பெற்றோர்களுமன்றிப் பிறர் இதனை எடுக்கப் பெறார்.

துஷியந்தன். அப்படி ஒருவர் எடுத்தால் ?

முதல்மாதர். உடனே அது பாம்புருவாய்க் கடிக்கும்.

துஷியந்தன். அம்மே அங்ஙனம் உருமாறியதைத் தாங்கள் எப்போதாயினும் பார்த்திருக்கின்றீர்களா ?

இருவரும். பலமுறை.

துஷியந்தன். (தனக்குள் களிப்போடு) என் பேராவல் இப்போது நிறைவேறியிருக்க,நான் ஏன் களிப்புறாதிருக்க வேண்டும் ? (குழந்தையைத் தழுவிக்கொள்கின்றான்.)

இரண்டாம்மாது. சுவரதே! நோன்பு நோற்றுக் கொண்டிருக்கிற சகுந்தலைக்கு இச் செய்தியைப்போய்அறிவிப்போம், வா. (இருவரும்போகின்றனர்.)

சிறுவன். என்னைவிடும். நான் அம்மாவிடம் போக வேண்டும்.

துஷியந்தன். என் அருமைக் குழந்தாய், என்னோடு கூட இருந்து உன் அன்னையைக் களிப்போடு சந்திப்பாய்.

சிறுவன். என் தந்தைதுஷியந்தன், நீ அல்லன்.

துஷியந்தன். (புன்சிரிப்போடு) இந்தவிவாதமே என்னை மெய்ப்பிக்கின்றது.

(ஒரேமுறை பின்னப்பட்ட சடையோடு சகுந்தலை வருகின்றாள்.)

சகுந்தலை. சர்வதமனனுடைய பூண்டானது தான் மாறவேண்டிய காலத்திலும் மாறாமல் தன்னியற்கைப் படியேயிருந்ததென்பதைக் கேட்டும் என் நல்லதிர்ஷ்டத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. அல்லது இனி, சானுமதியாற் சொல்லப்பட்ட வண்ணமும் இருக்கலாம்.

துஷியந்தன். (சகுந்தலையைப் பார்த்து) ஆ! இதோ என் அருமைச் சகுந்தலை அழுக்கேறிய ஆடை உடுத்தும், விரதானுட்டானத்தால் முகம் வற்றியும், ஒரேமுறை பின்னிய

சடையுடன் இருப்பதனால் மிகவும் இரக்கமில்லாதே னாகிய என்னைப் பிரிந்தது முதலாகத் தூய வொழுக்கத் தோடும் நெடுநாள் இவ்விரதானுட்டானத்தைமேற்கொண்டு செய்திருக்கின்றா ளென்பது புலனாகின்றது.

சகுந்தலை. (கழிவிரக்கத்தினால் வெளுத்துத் தோன்றும் அரசனைப் பார்த்து) இவர் உண்மையில் என் கணவனாகத் தோன்றவில்லை. அங்ஙனமாயின், மங்கலமான இரட்சைப் பூண்டு தரித்திருக்கும் என் மகனைத் தன் தேகபரிசத்தினால் அசுத்தப்படுத்தும் இவர் யார்?

சிறுவன். (தன் அன்னையிடம்போய்) அம்மா, இதோ யாரோ ஒருவர் என்னை 'ஓ மகனே' என்றழைத்து அணைக்கின்றார்.

துஷியந்தன். என் அன்பே, என் நிலைமையை நீ இப்போது தெரிந்து கொண்டமையால் நான் உன்னிடத்துச் செய்த பெருங் கொடுமையும் நன்மையாகவே முடிந்தது.

சகுந்தலை. (தனக்குள்) ஓ மனமே! ஆறுதலெய்து! ஆறுதலெய்து! தெய்வமானது என்மேற் கொண்ட பகைமையை ஒழித்து இரக்கங்கொண் டிருக்கின்றது. இவர் தாம் என் காதலர்.

துஷியந்தன். ஏந்தெழில் முகத்தாய், கிரகணம்விட்டவுடன் உரோகிணி என்னும் மீன் முழுமதியைச் சேர்ந்தவாறுபோல, என் மறதி என்னும் இருள் நீங்கவினால் தூரத்தப்பட்ட பின்பு நீ என் எதிரே வந்து நிற்பது என் அதிட்டமே.

சகுந்தலை. எம்பெருமானுக்கு வெற்றி சிறப்பதாக! (இதுபாதி சொல்லி நிறுத்திக் கண்ணீர் சொரிகின்றாள்.)

துஷியந்தன். காதலி, வெற்றி என்னுஞ் சொல் கண்ணீரினால் தடைப்பட்டு நின்றாலும், இங்குலிகம் ஊட்டப்

படாமையால் வெண்மை கலந்து சிவப்பாய் விளங்கும் இத ழ்களோடு கூடிய உன் முகத்தைப் பார்க்கின்றதுபற்றி வெற்றி அடைந்தவனாயினேன்.

சிறுவன். இவர் யார் ?

சகுந்தலை. குழந்தாய், உன் நல்லதிட்டத்தைக் கேள்.

துஷியந்தன். (சகுந்தலையின் அடிகளில் வீழ்ந்து) உரு வழகி, நான் உன்னை நீக்கினமையால் உண்டான துக்க உண ர்ச்சி நின் நெஞ்சினின்றும் ஒழிவதாக; அப்போது என் மனம் ஏதோ காரணத்தால் வலியதோர் மாயத்தால் மய ங்கி நின்றது; இருள் மயமான தமகுண வயப்பட்டவர்கள் மங்கலப் பொருள்களிடத்திலும் பெரும்பான்மையும் இத் தன்மையாகவே நடக்கின்றனர்; குருடன் தன் தலையிற் சூட்டப்பட்ட மலர் மாலையையும் பாம்பென்றஞ்சி எறிந்து விடுகின்றான்!

சகுந்தலை. எம்பெருமான் எழுந்திருக்க! உண்மை யாகவே நான் முற்பிறவியிற் பரிசுத்த தர்மங்களைத் தடை செய்த தீவினையானது அந்நாட்களில் தன் பயனை விளைவித் தது; அதனாலேதான், இயற்கையில் இரக்கமுடையராயிருந் தும் என் காதலர் அவ்வாறு என்னிடம் நடந்தனர்.

(அரசன் எழுந்திருக்கின்றான்.)

சகுந்தலை. துர்ப்பாக்கிய முடையளான இவளை எம் பெருமான் எவ்வாறு நினைவுகூரலாயினர் ?

துஷியந்தன். என்னுள்ளத்திற் றைத்த துயர மென் னுங் கணை நுனியைப் பிடுங்கி எறிந்த பின், அதனைச் சொல்லுகின்றேன்.

பேதைமை தன்னான் மாதைநான் நீக்கக்
கண்ணின் றண்டுளி கீழிதழ் வீழ்ந்து

பெருந்துய ருறுத்திய தன்றே, இன்றே
மற்றது தானும் வளைமயி ரிறையில்
உற்றது சிறிதே யாகலிற் பொற்கொடி
அளியேன் பெருந்துயர் நீங்க
எளியேன் முந்துறத் துடைக்குவென் மயிலே.

(சொல்லியவாறே துடைக்கின்றான்)

சகுந்தலை. (கணையாழியைப் பார்த்து) எம்பெருமானே, இஃதன்றோ அந்த மோதிரம்?

துஷியந்தன். அதுவே தான்; இம்மோதிரம் திரும்பக் கிடைத்தமையினாலேதான், நான் உண்மையாக உன்னை நினைவுகூர்வே னாயினேன்.

சகுந்தலை. எம்பெருமானை அடையாளங் கொண்டு மெய்ப்பிக்கப் புகுந்த காலத்தில் காணாதுபோய் ஈது இத்தனை துன்பமும் விளைவித்தது.

துஷியந்தன். அங்ஙனமாயின், கொடியானது தான் இவ்வேனிற் பருவத்தோடு கூடியதற்கு அடையாளமாக இம்மலரை அணிந்து கொள்ளட்டும்.

சகுந்தலை. நான் அதனை நம்பவில்லை. எம்பெருமானே அதனை அணிந்து கொள்ளட்டும்.

(பிறகு மாதலி வருகின்றார்.)

மாதலி. நீடுவாழ்வீர் அதிர்ஷ்ட வசமாய் நீர் நும் உரிமை மனையாளைக் கூடியதும், நும் புதல்வன் திருமுகத்தைக் கண்டதும் பாக்கியமே.

துஷியந்தன். என் விருப்பம் இனிய பழத்தைப்பெறுவதாயிற்று; ஐய மாதலி, இச்செய்திகள் இந்திரனுக்குத் தெரியா திருக்கலாமே.

மாதலி. (புன்சிரிப்போடு) தேவர் பார்வைக்கு எட்டாதது யாதுளது? நீடு வாழ்வீர், வாரும் தெய்வத் தன்மையுள்ள மாரீசர் தம்மைம் பார்க்கும்படி உமக்கு அனுமதி தந்தருளினார்.

துஷியந்தன். சகுந்தலே, புதல்வனை எடுத்துக்கொள், உன்னை முன்னிட்டுக் கொண்டுபோய் அவரைத் தரிசிக்க விரும்புகின்றேன்.

சகுந்தலை. எம்பெருமானோடு கூடச் சென்று குரவரை அணுக எனக்கு வெட்கமா யிருக்கின்றது.

துஷியந்தன். என் காதலி, மங்களகரமான சமயங்களில் அப்படிச் செய்யலாம். வா, வா.

(எல்லாரும் போகின்றார்கள்.)

(மாரீசர் அதிதியோடு ஆசனத்தி லிருந்த வண்ணமாய் வருகின்றார்.)

மாரீசர். (அரசனைப் பார்த்து) தாட்சாயணீ, உன் மகன் இந்திரனது போர்க்களத்தில் முதன்மை பெற்றுச் செல்ப வரும், உலகத்தைப் பாலனம் பண்ணுகின்றவருமான இவர் துஷியந்த மன்னன். இவர் தம்முடைய வில்லினால் கூரிய நுனைகளுள்ள வச்சிராயுதத்தின் றொழில்களைச் செய்து முடித்தலால், அவ்வாயுதம் இந்திரனுக்கு ஓர் அணிகலமாகவே யிருக்கின்றது.

அதிதி. இவருடம்பின் றோற்றமே இவரது பேராற்றலைப் புலப்படுத்துகின்றது.

மாதலி. நீடுவாழ்வீர், இதோ தேவர்களைப் பெற்றோரான இவர்கள் தம் பிள்ளைமேலுள்ள காதற் குறிப்புத் தோன்ற உம்மைப் பார்க்கின்றார்கள். அவர்களிடட்ப் போம்.

**துஷியந்தன்.** ஓ ஐய மாதலி, தக்கன் மரீசி என்னும் இருவர்க்கும் பிறந்தமையால் நான்முகனுக்குஒருதலைமுறை பிற்பட்டவரும், பன்னிருவடிவான துவாதசாதித்தியருக்குப் பிறப்பிடமானவரென்று முனிவர்களாற் சொல்லப்பட்டவரும், மூன்றுலகத்திற்கும் இறைமகனும் வேள்விப் பலியை முதலிற் பெற்று நுகர்ந்து இன்புறுகின்றவனுமான இந்திரனை ஈன்றவரும், தானே யுண்டாவதான பரம்பொருளும் தான் தோன்றுதற்குப் பிறப்பிடமாகக் கொள்ளப் பட்ட வருமான அவ்விருவரும் இவர்கள் தாமோ!

**மாதலி.** வேறு யார்?

**துஷியந்தன்.** (அருகிற்சென்று) இந்திரனுக்கு ஊழியக் காரனான துஷியந்தன் உங்களிருவரையும்வணங்குகின்றான்.

**மாரீசர்.** குழந்தாய், நீ இந்நில வுலகத்தை நெடுங்காலம் பாலனம் பண்ணுவாயாக!

**அதிதி.** குழந்தாய், நீ நிகரற்ற போர்வீரனா யிருப்பாயாக!

**சகுந்தலை.** என் புதல்வனோடும் உங்கள் திருவடிகளை வணங்குகின்றேன்.

**மாரீசர்.** குழந்தாய், உன் கணவன் இந்திரனைப்போன்றும், உன் மகன் சயந்தனைப் போன்றும் இருக்கின்றனர்; ஆதலால், வேறுவகையாய் ஆசீர்வதித்தல் தக்கதன்று. நீ இந்திராணியைப்போல் இருப்பாயாக!

**அதிதி.** குழந்தாய், நீ நின் கணவனால் மிகவும் நன்கு மதிக்கப்படுவாய்; செல்வச் சிரஞ்சீவியான நின் புதல்வன் இருகுடிக்கும் மகிழ்ச்சி தருவானாக! எல்லாரும் இருங்கள்.

(எல்லாரும் பிரஜாபதியின் இருமருங்கும் இருக்கின்றனர்.)

மாரீசர். (ஒவ்வோருவரையுங் குறித்துக்காட்டி) அதிர்ஷ்ட வசத்தால் கற்பிற் சிறந்த சகுந்தலையும், நற்குணஞ் சிறந்த இப்புதல்வனும், நீயும் சிரத்தை தனம் அனுஷ்டானமென்னும் மூன்றும் ஒருங்கு சேர்ந்ததுபோற் கூடி யிருக்கின்றீர்கள்.

துஷியந்தன். பெருமானே, முதலிற் குறித்தது நிறைவேறியதும், பிறகு தங்கள் தரிசனமும் கிடைத்தமையால் தங்கள் அனுக்கிரகம் ஒப்பில்லாததாயிருக்கின்றது. என்னை, முதலில் மலர் தோன்றுகின்றது, அதன் பின் கனி உண்டாகின்றது; முதலில் கார் எழுகின்றது, அதன் பின் மழை பொழிகின்றது. இதுதான் காரண காரியமுறை. மற்று இங்கோ, தங்கள் அனுக்கிரகம் பெறுதற்கு முன்னரே செல்வம் வரலாயிற்று.

மாதலி. படைத்தற் றொழில் புரிவோர் இவ்வாறு தான் தமது அனுக்கிரகத்தைக் காட்டுகின்றனர்.

துஷியந்தன். பகவானே, உங்கள் ஊழியக்காரியான இம்மடந்தையை யான் காந்தருவமண விதிப்படி மணந்துகொண்டும் அதன்பின் சிலநாட் கழித்து இவள் தம் உறவினரால் என்னிடம் கொண்டுவரப்பட்ட பொழுது யான் என் நினைவிழப்பால் இவளை விலக்குதல் செய்து, தங்கள் உறவினரான மாட்சிமை தங்கிய கண்ணுவருக்குத் தவறிழைத்தே னாயினேன். பிறகு, கணையாழியைப் பார்த்ததும் அவர் மகளை நான் முன் மணந்த துண்மையென அறிந்தேன். இஃதெனக்குப் பெரிதும் வியப்பா யிருக்கின்றது. தன் கண்ணெதிரே கடந்துபோம் உருவத்தைக் கண்டும் 'அஃதியானை யன்றுபோலும்' எனஐயமுற்றுப் பின் அதன் அடிச் சுவடுகளைப் பார்த்து அதனை ஒருவன் துணிபுற்ற

வாறுபோல, எனது மன மயக்கமும் அப்பெற்றித்தா யிருந்ததே.

மாரீசர். குழந்தாய், நீ தவறி நடந்ததாகக் கொண்ட ஐயத்தை ஒழித்துவிடு. அந்த நினைவிழப்பும் உன்னிடத்து நிகழ்ந்தது நியாயமே. சொல்வதைக் கேள்,

துஷியந்தன். சித்தமா யிருக்கின்றேன்.

மாரீசர். அப்ஸரஸ்தீர்த்தக்கரையி லிருந்து மிகத்துயருற்ற சகுந்தலையோடும் மேனகை தாட்சாயணி யிடம் வந்த அப்பொழுதே, துருவாச முனிவர் சாபத்தினால் உன் இல்லறக் கிழத்தியான இந்தப்பேதை உன்னால் விலக்கப்பட்டாளல்லது வேறுகாரணத்தா லன்றென எனது தவக்காட்சியால் தெரிந்து கொண்டேன். இதோ அச்சாபம் கணையாழியைக் காண்டலும் ஒழிந்து போயிற்று.

துஷியந்தன். (ஆறுதலோடு) ஐய இப்போது அப்பழியினின்றும் விடுதலைப் பெற்றேன்!

சகுந்தலை. (தனக்குள்) அதிட்ட வசத்தால், என் ஆருயிர்க்கணவன் என்னைக் காரணமில்லாமல் தள்ளிவிடவில்லை, நான் சபிக்கப்பட்டதாக எனக் குண்மையிலே நினைவுண்டாக வில்லை. அல்லது, எம்பெருமானைப் பிரிந்தமையால் நினைவு வேறுய்ப்போன என் நெஞ்சில் அச்சாபம் வந்தமை தோன்றவில்லை போலும். இதனாலன்றோ, என் கணவனுக்கு அந்த மோதிரம் காட்டப்படுதல் வேண்டுமென என் றோழிமார்கள் வலிந்து வற்புறுத்தினார்கள்.

மாரீசர். குழந்தாய், இப்போது நீ விவரமெல்லாம் அறிந்தனை. உன் காதலன் மேல் நீ வெறுப்புக் கொள்ளாதே. பார், சாபத்தினாலன்றோ நீ நீக்கப்பட்டாய். நினைவு மழுக்கத்தினால் உன்பாற் கொடுமை செய்த நின்

கணவனுக்கு மறதி யெனும் இருள் ஒழிந்தமையால், நீ மாத்திரமே இப்போது அவருக்குப் பட்டத்தரசியாயினை. மேலே அழுக்குப் படிந்ததனால் ஒளிமங்கிய கண்ணாடியிற் பிரதி பலனம் தெளிவாகத் தோன்றாவிடினும், அது துடைக்கப்பட்ட வழி அது நன்கு விளங்கித் தோன்றுகின்றதன்றோ.

துஷியந்தன். சுவாமி சொல்லுமாறே.

மாரீசர். குழந்தாய், நம்மாற் பிறப்புச் சடங்குகளெல்லாம் முறையே செய்யப்பெற்ற சகுந்தலையின் மகனை இதோ களிப்போடு ஏற்றுக்கொண்டாயென்று நம்புகின்றேன்.

துஷியந்தன். பெருமானே, என் குடி நிலை பெறுதல் இவனிடத்திலே தான் அமைந்திருக்கின்றது.

மாரீசர். அங்ஙனமே, இனி இவனே மன்னர்மன்னனுவானென்று அறிவீராக. பாரும், இடையே தெற்றுப்படாமற் செல்வதாகிய தேர்மே லமர்ந்து மாகடலைக் கடந்து இவன் தனக்கு நிகரில்லாமல் ஏழு தீவகங்களோடுங் கூடிய இந்நில வுலகத்தை வெற்றி கொள்வான். இங்கே விலங்குகளை யெல்லாம் வலிந்து அடக்கியது பற்றிச் சர்வதமனனென்று பெயர் பெற்ற இவன், மறுபடியும் உலகைத் தாங்கப்போவதுபற்றிப் பரதன் என்றும் பெயர் பெறுவான்.

துஷியந்தன். சுவாமிகளால் எல்லாப் பரிசுத்தசடங்குகளும் செய்யப்பெற்ற இவனிடமிருந்து நாங்கள் எல்லாம் எய்த எதிர் பார்க்கின்றோம்.

அதிதி. பகவானே, தம் புதல்வியின் எண்ணமெல்லாம் நிறைவேறப் பெற்றமை கண்ணுவமா முனிவருக்கும் அறிவிக்கப்படல் வேண்டும். தன் மகளிடக்கு மிக்க காதலை

டைய மேனகையோ எனக்கு இவ்விடத்தில்தானே ஏவற்றொழிற் செய்துகொண் டிருக்கின்றாள்.

சகுந்தலை. (தனக்குள்) அம்மா அவர்களே நான் மண்ணியதைச் சொல்லிவிட்டார்கள்.

மாரீசர். தவ வலிமையால் இவையெல்லாம் கண்ணுவ மாமுனிவர் கண்ணெதிரே தோன்றிவிட்டன.

துஷியந்தன். இதனாலன்றோ மாமுனிவர் என்னைக் கோபியாதிருந்தனர்,

மாரீசர். அப்படியானாலும், இந்த மங்கள காரியத்தை அவருக்குத் தெரிவித்தல் வேண்டும், யார் அப்பா அங்கே?

(ஒரு சீடன் வந்து.)

சீடன். பகவானே, இதோ அடியேன் இங்கிருக்கின்றேன்.

மாரீசர். ஏ காலவா, ஆகாயவழியாய் உடனேசென்று சாபம் ஒழிந்தமையால்நினைவுகூர்ந்த துஷியந்தன் சகுந்தலையை அவள் மகனோடும் திரும்ப அங்கீகரித்துக் கொண்டானென்னும் நற் செய்தியைக் கண்ணுவமா முனிவருக்குத் தெரிவிக்கக் கடவாய்.

சீடன். சுவாமி கட்டளைப்படியே. (போய் விட்டான்)

மாரீசர். மகனே, நீயும் உன் புதல்வனையும்மனையாளையும் அழைத்துக்கொண்டு, உன் நண்பன் தேவேந்திரனது இரதத்தில் ஏறி நின் நகரத்திற்குப் புறப்படு.

துஷியந்தன். பெருமான் கட்டளைப்படியே.

மாரீசர். இன்னும், இந்திரன் உன் குடிகட்கு ஏராளமான மழையைப் பெய்விக்கட்டும்! நீயும், வேள்விகள் வேட்டுத் துறக்க வாசிகளை உவப்பிப்பாயாக! இங்ஙனம்

இவ்விருவகை உலகஙகளுக்கும் விளையும் பயன்கள் பற்றிப் புகழப் படுவனவாகும் நற் கருமங்களைச் செய்துகொண்டு பல்லாயிரம் ஊழிகாலம் நீங்க விருவீரும் வாழ்வீர்களாக!

துஷியந்தன். என்ருல் இயன்ற மாத்திரம் நற்கருமங் களைச் செய்ய முயல்வேன்.

மாரீசர். குழந்தாய், இன்னும் உனக்கு நான் வேறு என்ன உதவி செய்யவேண்டும்?

துஷியந்தன். இதைப் பார்க்கிலும் வேண்டத்தக்கது பிறிதுண்டோ? சுவாமிகள் இவ்விஷயத்தில் இன்னும் அனுக்கிரகிக்க விரும்பினுல் பரதன் கூறும் இச்சொற்கள் நிறைவேறச் செய்திடுக:

சிறந்த மன்னவன் தன்குடிச் செல்வமே தெரிக
விறந்த கல்விசால் புலவர்சொல் வியந்திடப் படுக
நிறந்து தானுமை கூறராம் நீலலோ கிதர்யான்
பிறந்தி டாவகை யருளிமேற் பேறுநல் குகவே.

---

ஏழாம் வகுப்பு முடிந்தது.

---

சாகுந்தலம் முற்றும்.

